ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமானுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:
ஸ்ரீமத் வரதகுருவே நம:

ஆழ்வார்கள் வாழி. அருளிச் செயல் வாழி.
தாழ்வாதுமில் குரவர் தாம் வாழி. - ஏழ்பாரும்
உய்ய. அவர்கள் உரைத்தவைகள் தாம் வாழி.
செய்ய மறை தன்னுடனே சேர்ந்து. (உபதேசரத்தினமாலை 3ஆம் பாசுரம்)

ஆழ்வார்கள் ஏற்றம். அருளிச் செயல் ஏற்றம்.
தாழ்வாதும் இன்றி அவை தாம் வளர்த்தோர் - ஏழ் பாரும் உய்ய.
அவர்கள் செய்த வியாக்கியைகள் உள்ளதெல்லாம்
வையம் அறியப் பகர்வோம் வாய்ந்து. (உபதேசரத்தினமாலை 34ஆம் பாசுரம்)

தெருளுற்ற ஆழ்வார்கள். சீர்மை அறிவாரார்.
அருளிச் செயலை அறிவாரார். - அருள் பெற்ற
நாதமுனி முதலாம் (முதலான) நம் தேசிகரை அல்லால்
பேதை மனமே! உண்டோ பேசு. (உபதேசரத்தினமாலை 36ஆம் பாசுரம்)

கார்த்திகை மாதத்தில் அவதரித்த ஆழ்வார், ஆசார்யர்கள் பெயர்களும் திருநச்சத்திரங்களும் கீழே வருமாறு :

| ஆழ்வார்/ஆசாரியர் திருநாமம் | திருநட்சத்திரம் | பக்கம் |
|---|---|---|
| அருளாளப்பெருமாள் எம்பெருமானார் | பரணி } | 2 – 13 |
| ஈயுண்ணி மாதவப்பெருமாள் | பரணி } | |
| திருமங்கையாழ்வார் | கார்த்திகை } | 14 – 32 |
| நம்பிள்ளை | கார்த்திகை } | |
| திருப்பாணாழ்வார் | ரோகிணி | 33 – 40 |
| பத்தங்கி பரவஸ்து பட்டர்பிரான் ஜீயர் | புனர்பூசம் | 41 - 47 |

**இவர்களின் தனியன், நாள்பாட்டு, வாழித்திருநாமம் மற்றும் இவர்கள் அருளியுள்ள ப்ரபந்தங்கள், க்ரந்தங்களைப் பற்றி கீழே அனுபவிப்போம் :**

ஸ்ரீ :
ஸ்ரீமதே ராமானுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:
ஸ்ரீமத் வரத குரவே நம:

**<u>அருளாளப்பெருமாள் எம்பெருமானார், ஈயுண்ணி மாதவப்பெருமாள் - வருஷ திருநட்சத்திரம் - கார்த்திகை – பரணி</u>**




அருளாளப்பெருமாள் எம்பெருமானார்,விஞ்சிமூர்
புகைப்பட உதவி : விஞ்சிமூர் ஸ்ரீசினிவாசன் ஸ்வாமி, திருவல்லிக்கேணி



அருளாளப்பெருமாள் எம்பெருமானார் மூலவர், காஞ்சிபுரம்



அருளாளப்பெருமாள் எம்பெருமானார் உத்ஸவர், காஞ்சிபுரம்

புகைப்படங்கள் உதவி : காஞ்சிபுரம் கோமடம் ஸ்ரீ ஸ்ரீநாத் ஸ்வாமி



அருளாளப்பெருமாள் எம்பெருமானார் உத்ஸவர், ஸ்ரீவில்லிபுத்தூர்
புகைப்பட உதவி: விஞ்சிமூர் ஸ்ரீ வேங்கடாச்சாரி ஸ்வாமி, ஸ்ரீவில்லிபுத்தூர்

அவதாராஸ்தலம் - ஆந்திர மாநிலத்தில் உள்ள விஞ்சிமூர்.
இவர் செய்தருளின ப்ரபந்தங்கள் - ஞானசாரம் (நாற்பது பாசுரங்கள்),
ப்ரமேயசாரம் (பத்து பாசுரங்கள்) ; ஆசார்யர் - எம்பெருமானார்
சிஷ்யர்கள் - அநந்தாழ்வான், எச்சான், தொண்டனூர் நம்பி, மருதூர்நம்பி
(சரமோபாய நிர்ணயம் பக்கம் 534)

## அருளாப்பெருமாள் எம்பெருமானார்

### தனியன்

கார்த்திகே பரணீஜாதம் யதீந்த்ராஸ்ரீதமாஸ்ரயே /
ஜ்ஞாந ப்ரமேய ஸாராபி வக்தாரம் வரதம் முநிம் //

ஜ்ஞாநபக்தயாத்த வைராக்யம் ராமாநுஜ பதாஸ்ரீதம் /
பஞ்சமோபாய ஸம்பந்நம் ஸம்யமீந்த்ரம் நமாம்யஹம் //

வாழித்திருநாமம்

திருவாழுந் தென்னரங்கஞ் சிறக்க வந்தோன் வாழியே
தென்னருளாளர் அன்பால் திருத்தினான் வாழியே
தருவாழுமெதிராசன் தாளடைந்தோன் வாழியே
தமிழ்ஞானப்பிரமேயஸாரம் தமர்க்குரைப்போன் வாழியே
தெருளாரு மதுரகவிநிலை தெளிந்தோன் வாழியே
தேசுபொலிமடந்தன்னைச் சிதைத்திட்டான் வாழியே
அருளாளமாமுனியாம் ஆரியன்தாள் வாழியே
அருள் கார்த்திகைப் பரணியோன் அனைத்தூழி வாழியே

த்யான ஸ்லோகம்

ராமாநுஜார்ய ஸச்சிஷ்யம் வேதஸாஸ்த்ரார்த்த ஸம்பதம் /
சதுர்த்தாஸ்ரம ஸம்பந்நம் தேவராஜமுநிம் பஜே //

இந்த ஸ்லோகத்தின் பொருள்

எம்பெருமானாருடைய நல்ல சீடராய் வேதஸாஸ்த்ரார்த்தப் பொருள்களைச் செல்வமாக உடையவராய் ஸந்யாஸ ஆஸ்ரமத்தை உடையவரான தேவராஜ முனிவர் என்னும் அருளாளப் பெருமாள் எம்பெருமானாரை ஆஸ்ரயிக்கிறேன்.
எம்பெருமானார் ஏற்படுத்திய 74 சிம்மாசனாதிபதிகளில் அருளாளப்பெருமாள் எம்பெருமானாரும் ஒருவர் ஆவார்.

அருளாளப் பெருமாள் எம்பெருமானார் என்ற திருநாமம் ஏற்படக் காரணம்

எம்பெருமானாரை ஆச்ரயிப்பதற்கு முன்னால் இவருக்கு யக்ஞமூர்த்தி என்ற பெயர். இவர் அத்வைத ஸந்யாஸியாய் வித்வான்களை வாதத்தில் வென்று விருதுகள் பலபெற்று ப்ரகடநப்படுத்தி வந்தார். இவர் உடையவரையும் வாதத்தில் வெல்ல வேண்டும் என்று ஸ்ரீரங்கம் வந்து அவருடன் வாதம் செய்தார்.

17 நாட்கள் வாதம் நடந்தது. யக்ஞமூர்த்தி அத்வைதமாகிய மாயாவாத சித்தாந்தத்தை நிலை நிறுத்த முயன்றார். உடையவர் விஸிஷ்டாத்வைத சித்தாந்தத்தை நிலை நிறுத்த முயன்றார். 17வது நாள் வாதப்போர் முடிவில் இருவருக்குமே வாதப்போரில் வெல்ல முடியாது என்ற அவநம்பிக்கை வந்து கலங்கினார்கள். உடையவர் தனது ஆராதநப் பெருமாளிகிய `அருளாளப் பெருமாளை' த்யானம் செய்து வணங்கி நின்றார். அன்று இரவு இவர் கனவில் அருளாளப் பெருமாள் தோன்றி உமக்கு நல்லதொரு சிஷ்யனை உண்டாக்கவே இந்த ஏற்பாடு என்றார். நீர் ஆளவந்தாருடைய மாயாவாத கண்டனம் என்ற நூலில் உள்ள யுக்தியை சொல்லி அவரை வெல்வீராக என்று அருளிச் செய்தார்.

18வது நாள் வாதத்தில் உடையவர் தேவப்பெருமாளின் ஆணைப்படி வாதத்தில் வென்றார். யக்ஞமூர்த்தி தன் சித்தாந்தத்தை விட்டு விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தை ஏற்றார். உடையவர் தன்னுடைய திருவாராதநப் பெருமாள் பெயரையும் தன்னுடைய பெயரையும் சேர்த்து அருளாளப்பெருமாள் எம்பெருமானார்

என்று திருநாமமிட்டு அவருக்கு ஒருமடத்தையும் கொடுத்து சிஷ்ய சம்பத்களையும் ஏற்படுத்தினார். விஞ்சிமூர் தாதாசார்யர் இவருடைய பேரர் ஆவார்.

இவருடைய ஆசார்ய நிஷ்டை

எம்பெருமானார் இவருக்கு தனியாக ஒரு மடம் அமைத்துக் கொடுத்தார். வெளியூரிலிருந்து வந்த சிலர் எம்பெருமானார் மடம் எங்கே உள்ளது ? என்று கேட்க, உள்ளூரார் சிலர் எந்த எம்பெருமானார் மடம் என்று பதில் கேள்வி கேட்க, இதைக்கேள்விப்பட்ட அருளாளப் பெருமாள் எம்பெருமானார், ஐயோ! எம்பெருமானாருக்கு போட்டியாக வழங்கும்படி நாம் ஆகிவிட்டோமே என்று மனம் நொந்து தமது மடத்தை இடித்துவிட்டு, எம்பெருமானார் மடத்திலேயே வாழத்தொடங்கினார். இது இவரது ஆசார்ய நிஷ்டையை வியக்கும்படி செய்கிறது.

பின்பழகிய பெருமாள் ஜீயர் அருளியுள்ள வார்த்தாமாலையில் இவரைப்பற்றிக் குறிப்பிட்டுள்ள சில வார்த்தைகளை கீழே அனுபவிப்போம்.

வார்த்தாமாலை – 124ஆம் வார்த்தை

விக்ரமசோழன் திருவீதியிலே திருவரங்கச் செல்வர் எழுந்தருளா நின்றால், பிள்ளை உறங்கா வில்லிதாஸர் நாள் தோறும் ஆயுதம் எடாமல் சேவிப்பர். அருளாளப் பெருமாள் எம்பெருமானார் இவரிடம் பிள்ளாய் ! உம்முடைய ஆயுதம் என்று விநியோகப்படுவது என்று கேள்வி கேட்க, அதற்கு இவர் உம்முடைய அஞ்ஜலிபவித்ரம் விநியோகப்படும் அன்று அடியேனுடைய ஆயுதமும் விநியோகப்படும் என்றார்.

இதற்கு விவரணம் -

(பிள்ளை உறங்கா வில்லிதாஸர் பற்றிய ஒரு சிறு குறிப்பு – நம்பெருமாள் புறப்பாடு கண்டருளும் போது, அவருக்கு ஏதாவது குறை நேர்ந்தாலும் தம்மை முடித்துக் கொள்வதற்காகக் கத்தியும் கையுமாகக் கூடச் செல்வாராம் இவர். ஆழ்வார்களைப் போன்றே இவர் பெருமாளிடத்தில் கொண்டு இருந்த பொங்கும் பரிவு இதனால் விளங்குகிறது. வண்டர், சுண்டர் என்னும் இரு மருமக்கள் உறங்காவில்லிக்கு இருகைகள் போல் உதவி வந்தனர்.)

நம்பெருமாள் புறப்பாடு கண்டருளும் போது, அவர் சிறிது சாய்ந்தாலும் தாஸர் தம் பிராணனை முடித்துக் கொள்வதற்காகக் கைவிட்டு எடுக்காமாலே ஒரு ஆயுதத்தை (குற்றுடை வாளை) ஏந்திக்கொண்டு இருப்பார். தாஸர் நம்பெருமாளை ஸேவிக்கும்போதும், அந்த ஆயுதத்தைக் கைவிட்டு எடுக்காமல் ஸேவிப்பார்.

ஒருநாள் நம்பெருமாள் புறப்பாடு கண்டருளும் போது, அருளாளப் பெருமாள் எம்பெருமானார் இவரிடம் உம்முடைய ஆயுதம் என்று செயல்படும்? என்று கேள்வி கேட்க, அதற்கு இவர், இப்படிப்பட்ட ப்ரதிபத்தியுடன் தாம் அருகில்வரும் போது தம் உயிருக்கு ஊறு ஏற்படும்படி நம்பெருமாள் கைவிடமாட்டார். ஆகையாலே தம் ஆயுதத்துக்கு விநியோகம் ஏற்படாது என்று உறுதி கொண்ட

தாஸர், அதுக்கு த்ருசஷ்டாந்தமாக, உமது அஞ்ஜலிபவித்ரம் (ஜலபவித்ரம்) என்று விநியோகப் படுகிறதோ அன்று அடியேனுடைய ஆயுதமும் விநியோகப்படும் என்று அருளிச்செய்தார். (பவித்ரம் என்ற சொல் யதிகளின் த்ருதண்டத்திலுள்ள கொடியையும் குறிக்கும். எம்பெருமானார் வாழ்க்கையில் நடந்த ஒரு நிகழ்ச்சி இங்கே நம்மை நினைக்கத் தோன்றுகிறது. திருக்கோஷ்டியூர் நம்பி எம்பெருமானைரை தம்மிடம் விசேஷ அர்த்தங்கள் கேட்பதற்காக வரும்போது அவரை தண்டு பவித்திரத்தோடு மட்டும் வரச்சொன்னார். ஆனால் எம்பெருமானர் தம்முடன் கூரத்தாழ்வானையும் முதலியாண்டானையும் அழைத்துச் சென்றார். திருக்கோஷ்டியூர் நம்பி எம்பெருமானாரிடம் இவர்களையும் உம்முடன் ஏன் அழைத்து வந்தீர்கள் என்று கேள்வி கேட்க, அதற்கு எம்பெருமானார் இவர்கள் எனக்கு த்ருதண்டமாகாவும் (முதலியாண்டான்), பவித்திரமாகவும் (கூரத்தாழ்வான்) உள்ளார்கள் என்றார்.

<u>வார்த்தாமாலை - 441 ஆம் வார்த்தை - அன்னக்(டே)கடும் தீர்ந்தது என்றார் அருளாளப் பெருமாள் எம்பெருமானார்</u>

<u>இதற்கு விவரணம்</u>

எந்த எம்பெருமானார் மடம் என்று வழிப்போக்கர்கள் சிலர் கேட்பதை செவியுற்று, லோகத்துக்கு ஆசார்யரான எம்பெருமானாருக்குப் போட்டியாக நாமும் ஒரு எம்பெருமானார் ஆவதா? என்று துணுக்குற்று, அருளாளப் பெருமாள் எம்பெருமானார் தம்மடத்தை இடித்துவிட்டு எம்பெருமானார் மடத்திலேயே வாழத்தொடங்கினார் என்னும் ஐதிஹ்யம் குருபரம்பராப்ரபாவாதிகளில் ஸுப்ரஸித்தம். ஏற்கனவே எம்பெருமானார் ஸேஷப்ரஸாதம் கிடையாமல் இருந்த அந்நக்கேடும் அவர் மடத்திலேயே வாழத்தொடங்கியதிலிருந்து தீர்ந்தது என்று அவர் அருளிச்செய்த வார்த்தயாய் இருக்கலாம். அன்னக்கடு என்று பாடாமானால் விஷ அந்நம் என்று பொருள் படும்.

இவர் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு, ஒரு ஸ்ரீவைஷ்ணவர் பரமபதித்தால் அவர் எம்பெருமானார் திருவடியடைந்தார் என்று கூற வேண்டும் என அறிவுறுத்தல்

வடுகநம்பி திருநாட்டுக்குப்போனார் என்று ஒரு ஸ்ரீவைஷ்ணவர் இவரிடம் விண்ணப்பம் செய்ய, சிறிது போது மோஹித்துக் கிடந்து, உணர்ந்தருளி, அவரைப் பார்த்து திருநாட்டுக்கு போனார் என்று சொல்லக் கூடாது, எம்பெருமானார் ஸ்ரீபாதத்துக்குப் போனார் என்று சொல்ல வேண்டும் என்று அருளிச்செய்தார். ஸ்ரீசபரியும் பெருமாள் திருவடிகளிலே ப்ரார்தித்ததும் இதுவே.

ஞானசாரம் என்கிற திருநாமம் ஏற்படக்காரணம்

மாமுனிகள் அருளிய ஞானசார வ்யாக்கியான அவதாரிகையிலிருந்து எடுக்கப்பட்டது.

எம்பெருமானார் திருவடிகளிலே ஆஸ்ரயித்து, ஸகல வேத ஸாஸ்த்ர தாத்பரியார்த்தங்கள் எல்லாம் அருளிச்செய்யக்கேட்டு, தேவுமற்று அறியேன் என்று மதுரகவி ஆழ்வாரைப் போல அவர் திருவடிகளிலே நித்ய கைங்கர்யம் பண்ணியே வாழ்ந்திருந்த அருளாளப் பெருமாள் எம்பெருமானார், தம்முடைய பரமக்ருபையாலே இவ்வர்த்த விசேஷங்கள் எல்லாரும் அறிந்து உஜ்ஜீவிக்க வேணுமென்று தத்வஹித புருஷார்த்த ஜ்ஞாநத்தினுடைய ஸாரா அம்ஸத்தை பெண்ணுக்கும், பேதைக்கும் தெளியக் கடவதாக த்ரவிட பாஷையிலே (தமிழில்) இப்பரபந்தத்தை அருளிச் செய்தார். ஆகையாலே இந்த ப்ரபந்தத்திற்கு ஜ்ஞானசாராம் என்கிற திருநாமாயிற்று.

ப்ரமேய சாரம் என்கிற திருநாமம் ஏற்படக்காரணம்

மாமுனிகள் அருளிய ப்ரமேயசார வ்யாக்கியான அவதாரிகையிலிருந்து எடுக்கப்பட்டது.

எம்பெருமானார் திருவடிகளிலே சிலகாலம் ஸேவைபண்ணி தத்வஹித புருஷார்த்த விஸேஷங்கள் எல்லாம் சரமபர்வ பர்யந்தமாக அவர் அருளிச்செய்யக் கேட்டு தந்நிஷ்டராயிருக்கும் அருளாளப் பெருமாள் எம்பெருமானார் தம்முடைய பரம க்ருபையாலே ஸம்ஸாரி சேதநோஜ் ஜீவநார்த்தமாக சகல சாஸ்த்ரங்களிலும் ஓர் இரு ப்ரதேசத்திலே தாத்பர்ய ரூபேண ப்ரதி பாதிக்கப் படுகையாலே சகலர்க்கும் அறியவரிதாம்படி இருக்கிற அர்த்த விசேஷங்களை ஸங்க்ரஹித்து ஜ்ஞாநஸாராமாகிற ப்ரபந்த முகேந அருளிச்செய்து தலைக்கட்டினார். சகல சாஸ்த்ர ஸங்க்ரஹமாகையாலே ப்ரமாணசாரமான திருமந்த்ரத்தால் பிரதிபாதிக்கப்படுகிற ப்ரமேயங்களில் சாராம்சத்தை ஸங்கரஹித்து அருளிச் செய்ததால், இப்பரபந்தத்துக்கு ப்ரமேயசாரம் என்று திருநாமம் ஆயிற்று.

இவர் அருளியுள்ள திருவாசிரியத்தின் தனியன்

காசினியோர் தாம்வாழக் கலியுகத்தே வந்துதித்து
ஆசிரியப்பா வதனால் அருமறைநூல் விரித்தானை
தேசிகனைப் பராங்குசனைத் திகழ்வகுளத் தாரானை
மாசடையா மனத்துவைத்து மறவாமல் வாழ்த்துதுமே.

**ரஹஸ்ய த்ரய ஸாரம் த்வயாதி காரத்தில் இவரின் 3 காரிகைகள் மேற்கோளாகக் காட்டப்பட்டு இருக்கின்றன. அவையாவன :**

**1) ஒருபொருளின் நிரூபக விசேஷணத்தை அறிந்த பின்பே அதையுடைய பொருளை அறியமுடியும். ஆகையால் நீரூபகவிசேஷணமான பிராட்டியை அறிந்த பின்பே விசேஷ்யமான எம்பெருமானை அறியவேண்டும்.**

**2) தான் விரும்பும் பகவத் ப்ராப்திக்குத் தன் அஸக்தியாலே வேறுஸாதனமற்றவன். அந்த எம்பெருமானை அடைய அவனுடைய திருவடிகளையே மஹாவிஸ்வாஸத்தோடு உபாயமாகக் கொள்ளவேண்டும்.**

**3) பகவத் ப்ரபன்னர்கள் தங்களுடைய எல்லாப் பொறுப்பையும் எம்பெருமானிடம் ஸமர்ப்பத்து விட்டபடியால் தம்மிடம் எந்தக் கைம்முதலையும் எதிர் பாராமல் இருக்கும் தன்மை நம: என்னும் சொல்லுக்குப் பொருளாக அறிவாளிகளால் கூறப்படுகிறது.**

**மேலே சொன்ன விசஷயங்கள் புத்தூர் ஸ்வாமி அருளியுள்ள ஆசார்ய வைபமஞ்சரி என்னும் நூலில் இருந்து எடுக்கப்பட்டது.**

**ஈயுண்ணி மாதவப்பெருமாள்**




**நம்பிள்ளை கோஷ்டி - இதில் ஈயுண்ணி மாதவப்பெருமாள் எழுந்தருளியுள்ளார்**
**புகைப்படம் உதவி : காஞ்சிபுரம் கோமடம் ஸ்ரீ ஸ்ரீநாத் ஸ்வாமி**

தனியன்

கார்த்திகே பரணீ ஜாதம் ஸ்ரீலோகார்ய பதாஸ்ரிதம் /
வேதாந்த த்வய ஸம்பந்தம் மாதவார்ய மஹம்பஜே //

திருநாமம் - மாதாவாசாரியர், பெரியாழ்வாரப்பிள்ளை, சிறியாழ்வான் அப்பிள்ளை
ஆசார்யர் - நம்பிள்ளை
சிஷ்யர் - பத்மநாபப்பெருமாள் (திருக்குமாரர்)
இவர் ஈடு, ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களுக்கு மஹாப்ரவத்தகர்.
திருவவதாரஸ்தலம் - ஈயுண்ணி

இவரைப் போற்றி உரைக்கும் உபதேசரத்தினமாலை - 48 பாசுரம்

சீரார்வடக்குத் திருவீதிப்பிள்ளை. எழு
தேரார் தமிழ்வேதத்தீடுதனைத் - தாருமென
வாங்கிமுன்நம்பிள்ளை யீயுண்ணி மாதவர்க்குத்
தாம் கொடுத்தார். பின்ன தனைத்தான்.

நம்பிள்ளையும் ஈயுண்ணி மாதவப்பெருமாளும்

திருவாய்மொழிக்கு ஆறாயிரப்படி, ஒன்பதினாயிரப்படி, பன்னீராயரப்படி, இருபத்துநாலாயிரப்படி, முப்பத்தாறாயிரப்படி என்ற ஐந்து வியாக்கியானங்கள் அவதரித்தன. அந்த ஐந்து வியாக்கியானங்களுக்குள் ஈடு முப்பத்தாரயிரப்படி என்கிற வியாக்கியானமே காலசேஷபப்ரசாரத்தில் முக்கியமாக இருந்து வருகிறது. இந்த வியாக்கியானம் எம்பெருமான் பெருமைக்கும், ஆழ்வார் பெருமைக்கும் மிகத் தகுதியுள்ளதாய் அமைந்தபடியால் இதற்கு `ஈடு' என்னும் ப்ரஸித்தி ஏற்பட்டது. இதை "ஈடுமுப்பத்தாராயிரம்" என்றே வழங்குவர் பெரியோர். நம்பிள்ளையின் நியமனத்தினால் பெரிவாச்சான்பிள்ளை இட்டருளின இருபத்துநாலாயிரப்படி வியாக்கியாநம் இருந்தபோதிலும், நம்பிள்ளை மற்றொருசமயம் திருவாய்மொழிப்பொருளை உபந்யஸித்தருளும்போது அதைக்கேட்டறிந்து, வடக்குத்திருவீதிப்பிள்ளை பட்டோலை கொண்டு ஈடு முப்பத்தாறயிரப்படியாக்கி நம்பிள்ளை ஸன்னதியில் வைத்தருளினார். அவர் அதை கடாசஷித்து ஆனைக்கு கோலம் செய்ததுபோல் மிகவும் நன்றாக உள்ளது. ஆனாலும் இதை நமது இசைவு பெறாது ஏன் எழுதினீர்? பெரிவாச்சான் பண்ணலாமோ? நாமும் பண்ணுவோம் என்று பிடிவாதமாகச் செய்ததுபோல் தெரிகிறது என்று சீற்றத்துடன் கடிந்து பேசினார். வடக்குதிருவீதிப்பிள்ளை நடுநடுங்கி அடியேன் அப்படிச் செய்யவில்லை. மறந்து போகும்போது பார்த்துக் கொள்ளவே எழுதினேன் என்று பணிவுடன் விண்ணப்பம் செய்தார். மேலும் அறியாமல் செய்து விட்டேன் தேவரீர் பொறுத்தருள வேணும் என்று திருவடியில் விழுந்து கெஞ்சினார். நம்பிள்ளை க்ருபை கூர்ந்தார். பொறுத்தோம் என்று சாமாதனம் செய்து புன்முறுவலுடன் ஒரு வார்த்தை பேசினார். வாரீர், நீர் ஒரு அவதார விசேஷம் என்று நினைக்கிறேன். நாம் நஞ்சீயர் பிரசாதமாகச் சொன்ன அர்த்தங்களில் ஓர் எழுத்து மிகாமலும் குறையாமலும் எழுதியுள்ளீர். உம்முடைய சாமர்த்தியத்தை எவ்வாறு புகழ்வது என்று தெரியவில்லை என்று பாராட்டினார். அந்தச் சுவடியை தானே வைத்துக்கொண்டார்.

உபதேசரத்தினமாலை - 49 பாசுரம்

ஆங்கவர்பால்பெற்ற சிறியாழ்வானப்பிள்ளை.
தாம்கொடுத்தார் தம்மகனார் தம்கையில் - பாங்குடனே
நாலூர்பிள்ளைக்கவர்தாம் நல்ல மகனார்க்கவர்தாம்
மேலோர்க்கீந்தா ரவரேமிக்கு.

ஈயுண்ணி மாதவப்பெருமாளுக்கு சிறியாழ்வானப்பிள்ளை யென்ற ஒரு மறுபேரும் உண்டு. இதனை பிள்ளைலோகம் ஜீயர் பணித்த வியாக்கியானத்தில் காணலாம்.

ஈயுண்ணி மாதவப்பெருமாளும் ஈடு வியாக்கானமே உலகில் எல்லோரும் தெறிந்து கொள்ள வேண்டும் என்று ஆவல் கொண்டு பெரியபெருமாளை பலகாலம் ப்ரதஷ்ணம் செய்து வந்தார். ஒரு நாள் நம்பிள்ளையும் ஈயுண்ணி மாதவப்பெருமாளும் பெரிய பெருமாளைச் சேவித்துக் கொண்டு இருக்கும் போது பெரியபெருமாள் அர்ச்சகமுகேன நம்பிள்ளையிடம் ஈடு முப்பத்தாராயிரம் என்கிற மஹாகிரந்தத்தை பெறவேணும் என்று இவர் நம்மை மிகவும் உபாஸிக்கிறார். ஆதலால் அவரிடம் அதனைச் சேர்த்து விடுவீர் என்று ஆனையிட்டார். அவ்வானையை சிரமேற் கொண்டு, நம்பிள்ளை தம்முடைய விருப்பமும் அவ்வாறே இருக்க பெரியபெருமாளின் அனுமதியும் சேர்ந்ததால், ஈடு ஸ்ரீகோசத்தை அவர் திருக்கரங்கங்களில் மகிழ்ச்சியுடன் அளித்தார். அப்போது ஒரு நிபந்தனையிட்டார். இந்த ஸ்ரீகோஸத்தை பலருக்கும் காட்டாமல் ஓராண் வழியாகவே கற்பித்து வருமாறு கேட்டுக் கொண்டார். அந்த ஈடு ஸ்ரீகோசம் எவ்வாறு மாமுனிகளைச் சென்று அடைந்தது என்பதை கீழே காண்போம்.

நம்பிள்ளை
|
ஈயுண்ணி மாதவப் பெருமாள்
|
ஈயுண்ணி பத்மனாபப்பெருமாள்
|
நாலூர்பிள்ளை
|
நாலூர் ஆச்சான்பிள்ளை
|
திருநாராயணபுரத்து ஆய், திருவாய்மொழிப்பிள்ளை, இளம்பிளிசை பிள்ளை
|
மணவாளமாமுனிகள்

மாமுனிகள் தம் ஆசார்யரான திருவாய்மொழிப்பிள்ளையிடம் ஈட்டைக் கேட்டு அறிந்து, நாடும் நகரமும் நன்கு உணரும்படி திருவரங்கருக்கு முன் ஒரு வருடகாலம் அவற்றை விரித்துரைத்து, ஈட்டை பிரசாரப் படுத்தினார். அதனால் மாமுனிகளுக்கு **ஈட்டு பெருக்கர்** என்ற சிறப்புப் பெயர் கிடைத்தது.

## ஈடு பட்டோலைச் சுவடி ஓராண்வழியாகச் செல்லக் காரணம்

நம்பிள்ளை ஈடு பட்டோலைக் கட்டை ஈயுண்ணி மாதவப் பெருமாளிடம் கொடுக்கும் போது நீர் இதனை நாலைந்து சுவடிகளில் படியெடுத்து எழுதி பன்முகமாக வளர்த்து வாரீர் என்று நியமித்தார். அவரும் சற்றுத் தயங்கி அதற்குத் தக்க தகுதியில்லை என்று கூறினார். ஆனாலும் நம்பிள்ளை அவரை அருகில் இருத்தி அஞ்சாதீர் நீர்! என்று உற்சாகப்படுத்தி ஊக்கமளித்தார். அப்போது நம்பிள்ளை அரியதோர் ரஹஸ்யத்தை வெளியிட்டார். துன்னுபுகழ்க் கந்தாடைத் தோழப்பர் கனவில் தேவப்பெருமாள் தோன்றி உலகத்தை காப்பாற்றுவதில் ஊற்றமுடைய திருவனந்தாழ்வான் இராமாநுஜ முனிவராக மட்டுமின்றி மற்றெரு முனிவராகவும் அவதரிக்கப் போகிறார். அப்போது அவரை ஆசிரயிக்குமவர்கள் ஸதாசாரமும் தத்துவஜ்ஞானமும் உடையவராக இருப்பார்கள் என்று அருளிச்செய்தார்.

இதை மேற்கோள் காட்டி, திருவனந்தாழ்வான் இன்னும் ஒரு அவதாரம் செய்யும்வரை நீர் ஓராண்வழியாய் இந்த வியாக்கியானத்தை நடத்திவாரும் என்று சொல்லி பட்டோலைக் கட்டை, நம்பிள்ளை சிறியாழ்வான் அப்பிள்ளையிடம் பிரசாதித்தருளினார். அவரும் அதனை ஐந்து ஸம்புடமாக ஏறி அருளிப்பண்ணி, தம் திருக்குமாரர் ஈயுண்ணி பத்மனாபப் பெருமாளுக்கு அளித்து அதை உபதேசம் செய்தார்.

## இவருடைய ஆசார்ய பக்தி

இவர் நம்பிள்ளை காலசேஷப கோஷ்டியில் நாள் தப்பாமல் கலந்து கொண்டு கேட்பார். இவரிடத்தில் நம்பிள்ளைக்கு மிகுந்த பிரியம் இருந்தது. தம்முடைய ஆசார்யர் நஞ்சீயரின் பூர்வாசிரமத் திருப்பெயர் மாதாவாசாரியர் என்பது. அந்த திருப்பெயரை இவர் வஹித்துக் கொண்டு இருந்ததால், நம்பிள்ளைக்கு இவரிடத்தில் தனியான அன்பு ஏற்பட்டது. மேலும் இவர் கல்வி, கேள்விகளிலும் மிகவும் சிறப்படைந்தவராய் இருந்தார். ஈயுண்ணி என்பது இவர் பிறந்த ஊர். இதை அடைமொழியாகக்கொண்டே இவரும், இவருடைய திருக்குமாரரும் அறியப்படுவர்கள். இவர் திருவரங்கம் திருப்பதியை இருப்பிடமாகக் கொண்டு வாழ்ந்து வந்தார். நம்பிள்ளை திருவடியே எல்லாமாகப்பற்றி இருந்தார். நம்பிள்ளை இவர் ஊர் பெயரையும் சேர்த்து இவரை **ஈயுண்ணி மாதவப்பெருமாள்** என்று அழைத்து வந்தார். இவருக்குத் தான் நம்பிள்ளை தனியான ஒரு ஸ்தானத்தை வழங்கினார். இவருடைய பெருமையை மனதில் கொண்டு தான் நம்பிள்ளை ஈடு பட்டோலைக் கட்டை வடக்குத்திருவீதிப் பிள்ளையிடம் திருப்பிக் கொடுக்காமல் இவரிடம் கொடுத்து ஓராண் வழியாக வளர்க்கச் சொன்னார்.

மேலே சொன்ன விஷயங்கள் அடியேனுடைய ஆத்ம நண்பர் மதுரை பேராசிரியர் முனைவர் ஸ்ரீ.உ.வே இரா.அரங்கராஜன் ஸ்வாமி அருளியுள்ள **மன்னுபுகழ் மணவாளமாமுனிவன்** என்கிற நூலில் இருந்தும், காஞ்சீ ஸ்வாமி அருளியுள்ள உபதேச ரத்னமாலை வ்யாக்யானத்திலிருந்தும் எடுக்கப்பட்டது.

ஈயுண்ணி மாதவப்பெருமாள் என்னும் திருநாமத்தில் ஈயுண்ணி என்னும் அடைமொழிக்கு விளக்கம் (அயேனுடைய திருத்தமையானார் ஸ்ரீ உ.வே விஜயராகவாச்சார்யார் ஸ்வாமி இவரைப்பற்றி அருளியுள்ள ஒரு சிறு குறிப்பிலிருந்து எடுக்கப்பட்டது)

நம்பிள்ளையின் சிஷ்யாரான ஈயுண்ணி மாதவப்பெருமாள் என்னும் ஆசார்யரே முதன் முதலில் அவரிடம் இருந்து வடக்குத்திருவீதிப்பிள்ளை பட்டோலை படுத்திய ஈடு முப்பத்தாராயிரப்படி சுவடிகளைப் பெற்று அநுஸந்தித்து வந்தார். ஈயுண்ணி என்னும் அடைமொழியன் விளக்கத்தை கீழே காண்போம். ஈயுண்ணி என்று சொன்ன உடனேயே நமக்கு நினைவில் வருவது ஈ, உண்ணி என்கிற பூச்சிகளே. இங்கே பொருள் அவை இல்லை. ஈ என்றால் கொடு என்று பொருள். உண்ணி என்றால் உண்பவர் என்று பொருள். அதாவது கொடுத்து உண்பவர் என்று தேறுகிறது. நாமும் கூடக் கொடுக்கிறோம், உண்கிறோம். இதில் இவருக்கு என்ன தனிச் சிறப்பு என்று என்னத் தோன்றும். இங்கே ஸாவதாரண ந்யாயம் என்ற நியாயத்தின் மூலம் உட்பொருளை நாம் அறியலாம். பூர்வமீமாம்ஸையில் இந்த ந்யாயம் சொல்லப்படுகிறது. அதாவது அது என்றால் அதுதான். அவர் என்றால் அவர்தான் என்பதுபோலத் தேற்றேகாரத்தைச் சேர்த்து அர்த்தம் கொள்ளவேண்டும். முரண்பாடு ஏற்பாட்டால் மட்டும் இவ்வாறு செய்யலாகாது என்பதே அந்த நியாயத்தின் சுருக்கம். சில ரிஷிகள் தண்ணீரையே பருகியும், வாயுவையே உட்கொண்டும் தவம் செய்வர்களாம். அவர்களை அப்பசஷா:, வாயுபசஷா: என்பர். இதன்படிப் பார்த்தால் இந்த ஆசார்யர் ஈந்தே உண்பவர். கொடுக்க முடியாதபோது உண்ணவும் மறுத்தவர் என்று தெரிகிறது. எனவே தான் ஈயுண்ணி என்கிற அடைமொழி வந்திருக்கவேண்டும். நாவகாரியம் சொல்லிலாதவர் நாடொறும் விருந்தோம்புவார் (பெரியாழ்வார் திருமொழி - 4ஆம் பத்து 4ஆம் திருமொழி முதல் பாசுரம்), உதவுகொடையென்று இவற்றின் ஒழிவில்லா. பெரிய வண்மைமிகு மறையவர்கள் மலிவெய்து நாங்கூர் வைகுந்த விண்ணகரம் வணங்குமடநெஞ்சே (பெரியதிருமொழி - 3ஆம் பத்து 9ஆம் திருமொழி 6ஆம் பாசுரம்) என்றெல்லாம் ஆழ்வார்கள் கொண்டாடின ஈகையை இவர் நிரூபகமாகக் கொண்டிருந்தார் போலும்!.

அருளாளப்பெருமாள் எம்பெருமானார், ஈயுண்ணி மாதவப்பெருமாள் திருவடிகளே சரணம்

வாசிக தோஷ: சஷந்தவ்ய:

ஸ்ரீ :
ஸ்ரீமதே ராமானுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:
ஸ்ரீமத் வரத குரவே நம:

**திருமங்கை ஆழ்வார், நம்பிள்ளை - வருஷ திருநட்சத்திரம் - கார்த்திகையில் – கார்த்திகை**



திருமங்கைஆழ்வார் குமுதவல்லி நாச்சியார், திருநகரி



நம்பிள்ளை, ஸ்ரீரங்கம், திருவடியில் பின்பழகிய பெருமாள் ஜீயர்

## திருமங்கையாழ்வார்

### தனியன்

வ்ருஸ்சிகே க்ருத்திகா ஜாதம் சதுஷ்கவி ஸிகாமணிம் /
ஷட்ப்ரந்தக்ருதம் ஸார்ங்கமூர்த்திம் கலிஹமாஸ்ரயே //

கலியாமி கலித்வம்ஸம் கவிம் லோக திவாகரம் /
யஸ்ய கோபி: ப்ரகாஸாபி: ஆவித்யம் நிஹதம் தம: //

### நாள்பாட்டு – உபதேசரத்தினமாலை 8,9 பாசுரங்கள்

பேதைநெஞ்சே இன்றைப்பெருமையறிந்திலையோ
ஏதுபெருமை யின்றைக்கென்றென்னில் - ஓதுகின்றேன்
வாய்த்தபுகழ்மங்கையர்கோன் மாநிலத்தில்வந்துதித்த
கார்த்திகையில் கார்த்திகைநாள் காண்.

மாறன் பணித்த தமிழ்மறைக்கு. மங்கையர்கோன்
ஆறங்கம்கூற வவதரித்த – வீறுடைய
கார்த்திகையில்கார்த்திகைநா ளென்றென்று காதலிப்பார்
வாய்த்தமலர்த்தாள்கள் நெஞ்சேவாழ்த்து.

### வாழித்திருநாமம்

கலந்ததிருக் கார்த்திகையில் கார்த்திகை வந்தோன் வாழியே
காசினியி லொண் குறையலூர்க் காவலோன் வாழியே
நலந்திக ழாயிரத் தெண்பத்து நாலுரைத்தான் வாழியே
நாலைந்து மாறைந்தும் நமக்குரைத்தான் வாழியே
இலங்கெழு கூற்றிருக்கை யிரு மடலீந்தான் வாழியே
இம்மூன்றிலிரு நூற்றிருபத்தேழீந்தான் வாழியே
வலந்திகழுங் குமுதவல்லி மணவாளன் வாழியே
வாட்கலியன் பரகாலன் மங்கையர்கோன் வாழியே

*ஐயனருள்மாரி செய்ய அடியிணைகள் வாழியே
அந்துகிலும் சீராவும் மணியரையும் வாழியே
மையிலகு வேலணைத்த வண்மைமிகு வாழியே
மாறாமல் அஞ்சலிசெய் மலர்க்கரங்கள் வாழியே
செய்யகலனுடன லங்கல் சேர் மார்பும் வாழியே
திண்புயமும் பணிலமன்ன திருக்கழுத்தும் வாழியே
மையல் செய்யும் முகமுறுவல் மலர்க்கண்கள் வாழியே
மன்னுமுடித்தொப்பாரம் வளையமுடன் வாழியே

*இந்த வாழித்திருநாமத்தை ஶ்ரீரங்கம், திருவாலி, திருநகரி மற்றும் திருநாங்கூர் திவ்வயதேசங்களில் அநுசந்திக்கிறார்கள். (ஶ்ரீ வரமங்கைநாச்சியார் பக்த சபையார் வெளியுட்டள்ள பெரிய திருமொழி நூலில் இருந்து எடுக்கப்பட்டது)

இவர் அருளிச் செய்த ப்ரபந்தங்கள் - பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழுகுற்றிக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல்



திருமங்கையாழ்வார் திருவரசு, திருக்குறுங்குடி

திருமங்கையாழ்வாருக்கு பல திருநாமங்கள் உண்டு. இதனை அவரே கீழ்கண்ட பாசுரத்தில் தெறிவித்துள்ளார். பெரியதிருமொழி 3-4-10

செங்கமலத்து அயனனையமறையோர்
காழிச்சீராம விண்ணகர் என்செங்கண்மாலை
அங்கமலத்தடவயல்சூழ் ஆலிநாடன்
அருள்மாரி அரட்டமுக்கி அடையார்சீயம்
கொங்குமலர்க்குழலியர்வேள் மங்கைவேந்தன்
கொற்றவேற்பரகாலன் கலியன்சொன்ன
சங்கமுகத்தமிழ்மாலை பத்தும் வல்லார்
தடங்கடல்சூழுலகுக்குத்தலைவர் தாமே.

## திருமங்கையாழ்வார் பெருமை

கலியன், கலகன்றி, குறையல்பிரான், வாள்வீசும்பரகாலன், ஆடல்மாவலவன், ஆலிநாடன், மங்கை வேந்தன், மங்கையர் கோன், திருமங்கையாழ்வார் என்றிவை முதலான பல திருநாமங்கள் இவர்க்குள்ளன. திருவாலி, திருநகரியைச் சார்ந்த திருக்குறையலூரில் கார்த்திகை மாதத்துக் கார்த்திகை நன்னாளில் இவரது திருவவதாரம். மாறன் பணித்த தமிழ் மறைக்கு மங்கையர்கோன் ஆறங்கங்கூறவவதரித்த என்ற உபதேசரத்தின மாலையின் படியும், வேத சதுஷ்டய அங்கோங்பாங்கங்கள் பதினாலும் போலே இந்நாலுக்கும் இருந்தமிழ்நூற்புலவர் பனுவலாறும் மற்றை யெண்மர் நன் மாலைகளும் என்ற ஆசார்யஹ்ருதய சுர்ணையின்படியும் அறிய வேண்டிய விசேஷம் ஒன்றுண்டு. வடமொழி வேதத்திற்கு அங்கங்களும், உபாங்கங்களும் இருப்பது போல, தமிழ் வேதத்திற்கும்

அவையுள்ளன. ருக், யஜுஸ், ஸாமம், அதர்வணம் என்கிற நான்கு வேதங்களுக்கும் சீசஷா, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் என்கிற ஆறு அங்கங்களும், மீமாம்ஸா, ந்யாய, புராண, தர்ம சாஸ்தரங்கள் முதலிய உபாயங்கங்கள் எட்டும் ஆகப் பதினான்கு உறுப்புக்கள் அமைந் திருப்பது போலவே, நம்மாழ்வார் அருளிச்செய்த திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி, திருவாய்மொழி ஆகிய தமிழ் மறை நான்கிற்கும், இத்திருமங்கையாழ்வாருடைய திவ்வியப் பிரபந்தங்களாறும், மற்றையாழ்வார்கள் எண்மருடைய திவ்வியப் பிரபந்தங்களும் அங்கோபாங்கங்களாம் என்று ஸ்ரீமந்நாதமுனிகள் முதலான பூருவாசாரியர்கள் அறுதியிட்டனர். இவ்வாழ்வருடைய பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல், ஆகிய ஆறு பிரபந்தங்களும் ஆறு அங்கமாகக் கொள்ளப்பட்டன. வடமொழி வேதங்களுக்கு சீசஷா, சந்தஸ், வியாகரணம், நிருக்தம் முதலியவை அங்க மாகுந்தன்மையை பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் சீசஷாயாம் வர்ணசிசஷா பதஸமதிகமோ வ்யாக்ரியா நிர்வசோப்யாம் என்கிற ஸ்லோகத்தில் நீரூபித்துக்காட்டியிருப்பதுபோல நம்மாழ்வாருடைய தமிழ்மறைகளுக்கு இவ்வாழ்வாருடைய ஆற பிரபந்தங்களும் அங்கமாகும் தன்மையை நிரூபித்துக் காட்ட வேண்டாவோ என்னில் கேண்மின்.

அங்காங்கிபாவ ஸமந்வயம் பலபடிகளால் பொருந்தும். ஸம்ஸ்கிருத வேதங்களுக்கும் சீசைஷ முதலியவற்றிக்கும் அங்காங்கி பாவம் எவ்விதமாகப் பொருந்தியிருக்கின்றதோ அவ்விதமாகவே இங்கும் பொருந்தவேணும் என்கிற நிர்ப்பந்தமில்லை. நம்மாழ்வருடைய திருவுள்ளத்தைப் பெரும் பாலும் பின்பற்றியே இவ்வாழ்வார் அருளிச்செய்துள்ளார் என்பதுவே இங்கு முக்கியமாக கூறிக்கொள்ளத் தக்கது. இதையிட்டே மாறன் பணித்த தமிழ் மறைக்கு மங்கையர்கோன் ஆறங்கங்கூற என்று மாமுனிகள் அருளிச்செய்தார். ஸ்தாலீபுலாக நீதியாய்ச் சில விஷங்களை நீரூபித்துக் காட்டி ஸமந்வயம் உணர்த்துவோம் இங்கே.

<u>நம்மாழ்வாருக்கும் திருமங்கையாழ்வாருக்கும் திருக்குடந்தையிலே அபிநிவேசம்</u>

திவ்விய தேசங்களுள் நம்மாழ்வாருக்கு எந்த திவ்ய தேசத்தில் அதிக மான அபிநிவேசம் என்று ஆராயுங்கால் அது திருக்குடந்தையிலே என்பது அறிய எளிதாகும். நம்மாழ்வார் இந்நிலத்திருந்து கொண்டே சூழ்ந்து நின்ற மால் விசும்பில் தொல்லை வழிகாட்ட, ஆழ்ந்ததனை முற்று மனுபவித்து (திருவாய்மொழி நூற்றந்தாதி 99வது பாசுரம்) என்னுப்படி பரமபத அனுபவத்தைச் செய்து அமைத்த சூழ்விசும்பணி முகிற் பதிகத்தில் ஒரு திவ்யதேசத்தைப் பற்றியும் ப்ரஸ்தாவம் செய்ய வேண்டிய அவசியம் இல்லாதிருக்கவும் (திருவாய்மொழி 10ஆம் பத்து 10ஆம் திருவாய்மொழி), அப்பதிகத்தில் மடந்தையர் வாழ்த்தலும் என்கிற 7ஆம் பாசுரத்தில் குடந்தையெங் கோவலன் குடியடியார்க்கே - அதாவது இந்த முக்தாத்மா திருக்குடந்தை எம்பெருமானிடத்தில் குடிகுடியாக அடிமைப் பட்டவரென்று சொல்லிக்கொண்டு அங்குள்ளார் கொண்டாடினர் என்று அருளிச்செய்திருக்கையாலே திருநாட்டிலும் கூட மறக்க முடியாதபடி நம்மாழ்வார்க்குத் திருக்குடந்தை பதியின் அனுபவம் செல்லுகின்றது என்று தெரிவதனால் இத்திருப்பதியே நம்மாழ்வாருடைய நிகரில்லாத அபிநிவேசத்திற்கு ஆஸ்பதமானது என்று அறுதியிடப்படும். அன்றியும் திவ்வியப்பிரபந்தங்களெல்லாம்

லோபமடைந்திருந்த ஒரு காலவிசேஷத்தில் ஸ்ரீமந்நாதமுனிகள் அவற்றை புநருத்தாரம் செய்வதற்கு திருக்குடந்தைப்பதி விஷயமான ஆராவமுதே என்கிற திருவாய்மொழியே மூல காரணமாய் இருந்தது என்கிற ஐதிஹ்யம் இருப்பதனாலும் மேலே குறித்த விஷயம் ஊர்ஜிதமாகும்.

இதற்குச் சேரவே திருமங்கையாழ்வார் பெரியதிருமொழியைப் பாடத் தொடங்கும் போதே தூவிசேரன்னம் துணையொடும் புணருங் சூழ் புனற் குடந்தையே தொழுது என்றும், சொற்பொருளாளீர் சொல்லுகேன் வம்மின் சுழ்புனற் குடந்தையே தொழுது என்றும் அருளிச் செய்து, சரமப் பிரபந்தமாகிய திருநெடுந்தாண்டகத்தின் முடிவிலும் தண் குடந்தைக் கிடந்த மாலை நெடியானையடி நாயேன் நினைந்திட்டேனே என்று திருக்குடந்தையையே பேசித் தலைக்கட்டினார். அன்றியும் திருக்குடந்தைக் கென்றே திருவெழுகூற்றிருக்கை என்கிற ஒரு தனிப் பிரபந்தம் திருவாய் மலர்ந்தருளினார்.

## <u>நம்மாழ்வாருக்கும் திருமங்கையாழ்வாருக்கும் ஸ்ரீவராஹநாயனார் பக்கலிலே அபிநிவேசம்</u>

அர்ச்சாவதாரம் நிற்க; விபவாவதாரங்களுள் எந்த அவதாரத்தில் நம்வாழ்வாருக்கு மிகுந்த அபிநிசேவம் என்று ஆராயுங்கால் முதற் பிரபந்தமான திருவிருத்தத்தில் பெருங் கேழலார் தம் பெருங்கண் மலர்ப்புண்டரீகம் நம்மேலொருங்கே பிறழ வைத்தாரிவவகாலம் (45ஆம் பாசுரம்) என்றும் ஏனத்துருவாயிடந்த - ஞானப் பிரானையல்லாலில்லை நான் கண்ட நல்லதுவே (99ஆம் பாசுரம்) என்றும் அருளிச் செய்தார். அவாவற்று வீடு பெறுவதற்கு முன்னே கோலவராக மொன்றாய் நிலங்கோட்டிடைக் கொண்ட எந்தாய் - உன்னைப் பெற்றினிப் போக்குவனோ? (திருவாய்மொழி10-10-7) என்று சொல்லித் தலைக்கட்டுகையாலே ஸ்ரீவராஹநாயனார் பக்கலிலே நம்மாழ்வாருக்கு நல்லன்பு என்று தெரியலாகும். இதற்குச் சேரவே திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியைத் தொடங்குகையில் விபவாவதாரத்தைப் பற்றி வாய் திறக்கும் போதே பன்றியாயன்று பாரகங்கீண்ட பாழியானாழியானருளே நன்று நானுய்ய நான் கண்டு கொண்டேன் என்று ஸ்ரீவராஹநாயனாருடைய அருள் கொண்டே தாம் உஜ்ஜீவிக்கப் பெற்றதாக அருளிச்செய்தார்.

## <u>நம்மாழ்வாருக்கும் திருமங்கையாழ்வாருக்கும் ஆராத்ய தேவதை தேவப்பெருமாள்</u>

நம்மாழ்வார் தமது திருவுள்ளத்தில் ஆராத்ய தேவதையாகக் கொண்டது தேவப்பெருமாளையே என்பது - முதல் பிரபந்தாமான திருவிருத்தத்தின் முதல் பாசுரத்தில் இமையோர் தலைவா! மெய்ந்நின்றுகேட்டருளாய் அடியேன் செய்யும் விண்ணப்பமே என்றதனாலும், சரமப் பிரபந்தமான திருவாய்மொழியியின் முதல் பாசுரத்தில் அயர்வறு மமரர்களதிபதியவனவன் துயரறு சுடரடி தொழுதெழுன்மனனே! என்றதனாலும் தேறிநிற்கும். இதற்குச் சேரவே திருமங்கையாழ்வார் தமது பெரியதிருமொழில் துணிவினியுனக்குச் சொல்லுவன் மனமே! தொழுதெழு - அமரர் பெருவிசும்பருளும் பேரருளாளனெம்பெருமான் என்று பணித்தார்.

நம்மாழ்வருடைய தொழு தெழென்மனனே போலவே இவருடைய தொழுதெழுமனமேயும் பேரருளாளன் விஷயத்திலேயே அமைந்த அமைதி நோக்கத்தக்கது.

## நம்மாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் மடல் ஊறுதலில் ஒற்றுமை

நம்மாழ்வார் திருவாய்மொழியில் மாசறுசோதிப் பதிகத்தில் மடலூர்தலை இருமுறை ப்ரஸ்தாவித்து விட்டார். மங்கைமன்னன் அதற்கென்று தனிப்பட சிறிய திருமடல், பெரிய திருமடல் என இரண்டு பிரபந்தங்களைப் பணித்தருளினார்.

நம்மாழ்வார் திருவாசிரியத்தில் நளிர்மதிச்சடையனும் நான்முகக்கடவுளும் என்கிற பாசுரத்தில் சுருங்க அருளிச்செய்த விஷயமொன்றை, திருமங்கையாழ்வார் பெரியதிருமொழி 11-6 மைந்நின்ற கருங் கடல்வாயுல கின்றி என்ற ஒரு பதிகத்தினால் விரியவுரைத்தருளினார். இங்ஙனே பெரியார்வாய்க் கேட்டறிய வேண்டிய பல பல விஷயங்கள் இங்குப் பொருத்தமாக உணரத்தக்கன.

## திருமங்கையாழ்வாரின் தன்னேற்றம்

இவ்வாழ்வார் திருவரங்கம் பெரிய கோயிலிலே மிகப்பெரிய திருப்பணிகள் பல செய்தருளினார். அதைப்பற்றி பட்டர் ஸ்ரீரங்கராஜ ஸ்தவத்தில் ஜிதபாஹ்யஜிநாதி மணிப்ரதிமா அபி வைதிகயந்நிவ ரங்கபுரே, மணிமண்டப வப்ரகணாந் விததே பரகாலகவி: ப்ரணமேமஹி தாந் என்று அருளிச்செய்தார்.

இந்த ஸ்லோகம் அமைந்த அழகு மிகவும் அற்புதமானது. அதைச் சிறிது விளக்குவோம். ஆழ்வார்களுடைய திருவவதாரம் அவைதிகர்களையும் வைதிகர்களாக்குவதற்காக. திருமங்கையாழ்வாருடைய திருவவதாரத்தினால் இவ்வர்த்தம் நன்கு விளக்கப்படுகிறது. மற்றையாழ்வார்கள் அவைதிகர்களாயிருந்த சேதநர்களை மாத்திரமே வைதிகர்களாக்கிப் போந்தார்கள். இவ்வாழ்வார் அவைதிகங்களாயிருந்த அசேதநங்களையுங்கூட வைதிகங்களாம்படி திருத்திப்பணி கொண்டார் என்பது தன்னேற்றம். இவ்வாழ்வார் அவைதிகர்களாயிருந்த ஜைந பௌத்த விக்ரஹங்களையும் வைதிகங்களாக ஆக்கிவிட்டாரன்றோ. பகவத் பாகவத விஷயங்களில் கிஞ்சித்கரிக்கப் பேறுவதே வைதிகத்வமாகும்.

இவ்வாழ்வருடைய கவித்திறம் சதுஷ்கவி ப்ரதாநாய பரகாலாய மங்களம் என்றதனால் மிக விளங்கும். ஆசு கவி, மதுர கவி, சித்ர கவி, விஸ்தார கவி என்று நால்வகைப் பட்ட கவிகளிலும் இவர் தலைவர் என்பது இவரது ஆறு பிரபந்தங்களினாலும் அறிய எளிதாகும்.

(மேலே குறிப்பிட்ட விஷயங்கள் காஞ்சீ ஸ்வாமி அருயுள்ள திருவத்யயனோத்ஸவ வைபவ தீபிகையிலிருந்து எடுக்கப்பட்டது)

## இவரை போற்றி உரைக்கும் பாசுரம் - இராமானுசநூற்றந்தாதி - 17 பாசுரம்

**முனியார் துயரங்கள் முந்திலும். இன்பங்கள் மொய்த்திடினும்
கனியார் மனம்கண்ண மங்கைநின் றானைக். கலைபரவும்
தனியானையைத் தண்டமிழ்செய்த நீலன்றனக் குலகில்
இனியானை. எங்கள் இராமானுசனை வந்தெய்தினரே.**

## இந்தப் பாசுரத்தின் பொருள்

ஸகல சாஸ்த்ரப்ரதிபாத்யனான எம்பெருமானைத் தம்முடைய திவ்ய ப்ரபந்தங்களிலே அமைத்துப் பாடின திருமங்கையாழ்வாருக்கு அந்தரங்க பக்தரான எம்பெருமானாரை ஆச்ரயித்த மஹான்கள் ஸுகதுக்கங்கள் மேலிடுங்காலத்தில் மற்ற ஸம்ஸாரிகளைப் போலே ஹர்ஷசோகங்களை அடையாமல் எவ்வித விகாரமும் அற்றிருப்பர்கள். நீங்களும் ஹர்ஷ சோகங்களில் கலங்க வேண்டா என்றபடி. கண்ணமங்கை நின்றானை - திருக்கண்ணமங்கையைச் சொன்னது மற்ற எல்லாத் திருப்பதிகட்கும் உபலசஷணம். பல திருப்பதிகளிலும் புக்குக் கவிபாடின கலியன் என்றபடி. நீலன் - திருமங்கையாழ்வார் திருநாமங்களில் ஒன்று.

## பெரியாழ்வாரும் திருமங்கையாழ்வாரும்

(ஸ்ரீசைலேஸதயாபாத்ரம் என்கிற மாத இதழின் ஆசிரியர் ஸ்ரீ.உ.வே ரகுராமன் (பாலாஜி) ஸ்வாமி அருளியுள்ள கட்டுரையிலிந்து எடுக்கட்டது)

## மாமுனிகள் இவர்களைப்பற்றி அருளியுள்ள ஸ்லோகம்

மணவாளமாமுனிகள் எம்பெருமானார் விஷயமாக அருளியுள்ள யதிராஜவிம்ஸதியில் **ஸ்ரீபட்டநாத பரகால முகாப்ஜமித்ரான்** (2வது ஸ்லோகம்) என்கிற ஸ்லோகத்தில் பட்டர்களான வித்வான்களுக்குத் தலைவரான பெரியாழ்வார், எம்பெருமானுடைய எதிகரிகளுக்குக் காலனைப்போன்றவரான திருமங்கையாழ்வார் ஆகிய இருவருவடைய முகமாகிற தாமரையை மலரச் செய்பவர் எம்பெருமானார் என்கிறார்.

## பரதத்தவ நிர்ணயம் செய்தல்

பெரியாழ்வார் பாண்டியனுடைய ராஜ்யசபையில் பரதத்தவ நிர்ணயம் செய்தார். ஸ்ரீமந்நாராயணனே மேலான உண்மைப் பொருள் என்று நிரூபித்தார். கலியனும் மைந்நின்ற கருங்கடல் என்கிற பெரிய திருமொழி பதிகத்தில் (11ஆம் பத்து 6ஆம் திருமொழி) எம்பெருமானுடைய மேன்மையையும் பிறருடைய தாழ்வையும் நன்றாக அருளிச்செய்தார்.

## கோயில் திருப்பணிகள்

பெரியாழ்வார் ஸ்ரீவில்லிபுத்தூரில் வடபெருங்கோயிலுடையான் ஸந்நிதியில் பாண்டியமன்னன் கொடுத்த பொர்கிழியுலுள்ள பெரும் தனத்தைக்கொண்டு கோபுர, ப்ரகாரங்கள் நிர்மானம் செய்தார். திருமங்கையாழ்வார் நாகப்பட்னத்திலிருந்து தங்க புத்தவிக்கரகத்தைக் கொண்டு வந்து அதை உருக்கி, விற்று **ரங்கபுரே மணிமண்டப வப்ரகணாந்விததே பரகால கவி:** (ஸ்ரீரங்கராஜ ஸ்தவம் 1-36) என்று பட்டர் அருளியபடியே திருவரங்கத்தில் சிறந்த ப்ராகரங்களையும், திருமண்டபங்களையும், கோபுரம், திருமதிள்களையும் நிர்மாணம் செய்தார்.

## எம்பெருமானை உள்ளத்திலே கொண்டிருத்தல்

பெரியாழ்வார் வேயர் தங்கள் குலத்துதித்த விட்டுசித்தன் மனத்தே. கோயில் கொண்ட கோவலனைக் கொழுங்குளிர்முகில்வண்ணனை (பெரியாழ்வார் திருமொழி 5ஆம் பத்து 4ஆம் திருமொழி 11ஆம் பாசுரம்) என்று சொன்னபடி தம் மனத்தில் கொண்டிருந்தார். திருமங்கையாழ்வார் பெரியதிருமொழியில் **பாட்டினால் உன்னை என் நெஞ்சத்து இருந்தமை காட்டினாய் கண்ணபுரத்துரை அம்மானே** (8ஆம் பத்து 10ஆம் திருமொழி 9ஆம் பாசுரம்) என்று எம்பெருமானைத் தம் மனத்தில் வைத்துக் கொண்டாடினார்.

## பட்டநாத பரகாலர்கள் இருவரின் பாசுரங்களில் ஒற்றுமை

பெரியாழ்வார் **என்னாதன் தேவிக்கு அன்று இன்பப்பூ ஈயாதாள்** என்கிற பதிகத்தில் (3ஆம் பத்து 9ஆம் திருமொழி) இரண்டு ஆயர் மங்கையரின் தன்மையை அடைந்து **நந்தன் மதலையைக் காகுத்தனை நவின்று** என்று இராமக்ருஷ்ணா அவதாரங்களை ஓருசேர அநுபவித்தார். அதுபோலவே திருமங்கையாழ்வாரும் **மானமரும் மென்னோக்கி வைதேவி இன்துணையா** (பெரியதிருமொழி 11ஆம் பத்து 5ஆம் திருமொழி) என்கிற பதிகத்தில் இரண்டு பிராட்டிமாரின் தன்மையை அடைந்து எம்பெருமானின் மேன்மையையும் எளிமையையும் ஏககாலத்தில் அநுபவித்தருளினார்.

பெரியாழ்வார் **அரவணையாய் ஆயரேறே அம்ம உண்ணத் துயிலெழாயே** (2ஆம் பத்து 2ஆம் திருமொழி) என்னும் பதிகத்தில் கிருஷ்ணனை அம்மம் உண்ண அழைத்தார். பரகாலனும் **சந்தமலர்குழல்தாழ தான் உகந்தோடித் தனியே வந்து** (பெரிய திருமொழி 10ஆம் பத்து 4ஆம் திருமொழி) என்கிற பதிகத்தில் தம்மை யசோதைப் பிராட்டியாக பாவித்துக் கண்ணனை அம்மம் உண்ண அழைத்தார்.

பெரியாழ்வார் **மாணிக்கக்கிண்கிணியார்ப்ப மருங்கின் மேல்** (1ஆம் பத்து 6ஆம் திருமொழி) என்னும் பதிகத்தில் யசோதை பாவனையில் கண்ணனை சப்பாணி கொட்டி அருள வேண்டும் என்று பிராத்தித்து அந்த சேஷ்டிதத்தை அநுபவித்தார். திருமங்கையாழ்வாரும் **பூங்கோதையாச்சி கடைவெண்ணெ புக்குண்ண** (10ஆம் பத்து 5ஆம் திருமொழி) என்கிற பதிகத்தில் யசோதை பாவனையில் கண்ணன் ஒரு கையோடு மற்றெரு கையைச் சேர்த்துக் கொட்டும் சப்பாணிப் பருவத்தை அநுபவித்தார்.

## இருவரும் பெண்தன்மை எய்தி திருத்தாயார் சொல்வதாக அருளியுள்ள பாசுரங்கள்

நல்லதோர் தாமரைப் பொய்கை நாண்மலர் மேல் பனி சோர (3ஆம் பத்து 8ஆம் திருமொழி) என்கிற பதிகத்தில் இரவில் திருத்தாயாரோடு ஒரே படுக்கையில் சயனத்திருந்த பட்டநாத நாயகியை எம்பெருமான் எழுப்பி அழைத்துக்கொண்டு போக பெண்பிள்ளையைக் காணாமல் மதுரைப்புறம் புக்காள்கொலோ என்று வருந்திப் பேசுகிறாள். அதுபோல் பரகாலன் கள்வன்கொல் யான் அறியேன் கரியான் ஒரு காளை வந்து (3ஆம் பத்து 7ஆம் திருமொழி) என்கிற பதிகத்தில் எம்பெருமான் பரகாலநாயகியை அழைத்துச் சென்றபோது அவளுடைய திருத்தாயார், அவ்விருவரும் அள்ளலம் பூங்கழனி அணியாலி புகுவர்கொலோ என்று திருவாலி நகரை அடைவர்களோ அடையாமல் போவர்களோ என வருந்திப் பேசுகிறாள்.

பட்டநாத பரகாலர்கள் இருவரும் திருக்கோட்டியூர் எம்பெருமானுக்கும் திருவெள்ளறைப் புண்டரிகாசஷனுக்கும் ஒருபதிகம் பாடியுள்ளனர். திருவரங்கத்து எம்பெருமானுக்கு பட்டநாதர் மூன்று பதிகங்கள் பாடினார். (4ஆம் பத்து 8, 9, 10 திருமொழிகள்). மங்கை மன்னன் ஐந்து பதிகங்கள் பாடினார். (5ஆம் பத்து 4, 5, 6, 7, 8 திருமொழிகள்).

## இருவருக்கும் திருமாலிருஞ்சோலைமலையே ப்ராப்யம்

தெற்குத்திருமலையில் எழுந்தருளி உள்ள அழகரைக்காட்டிலும் அவர் விரும்பி எழுந்தருளி உள்ள திருமாலிருஞ்சோலைமலையே ப்ராப்யம் என்று அலம்பாவெருட்டாக் கொன்று திரியும் அரக்கரை (4ஆம் பத்து 2ஆம் திருமொழி) என்னும் பதிகத்தில் அருளிச்செய்தார். பரகாலன் முந்துறவுரைக்கேன் விரைக்குழல் மடவார் கலவியை விடுதடுமாறல் (9ஆம் பத்து 8ஆம் திருமொழி) பதிகத்தில் திருமாலிருஞ்சோலையில் எழுந்தருளியுள்ள எம்பேருமானைக்காட்டிலும் அந்த மலையே ப்ராப்யம் என்று அருளிச்செய்தார்.

## கண்ணன் எம்பெருமானுடைய தீம்புகளைப் பற்றி இவ்விருவரும் அருளியுள்ளது.

பெரியாழ்வார் வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடையிட்டு அதனோசை கேட்கும் (2ஆம் பத்து 9ஆம் திருமொழி) என்கிற பதிகத்தில் வண்டு களித்திரைக்கும் பொழில் சூழ் என்கிறபடியே திருவரங்கத்து எம்பெருமான் கிருஷ்ணனாகத் திருவவதரித்த காலத்தில் செய்தருளின லீலைகளை எல்லாம் பரக்க அநுபவித்தார். இதைப்போன்றே பரகாலனும் மானமுடைத்து உங்கள் ஆயர் குலம் அதனால் பிறர் மக்கள் தம்மை (10ஆம் பத்து 7ஆம் திருமொழி) என்கிற பதிகத்தில் தம்மை யசோதையாகவும் நந்தகோபர் திருமாளிகைக்கு அருகிலுள்ளவர்களை இடைப்பெண்டிராகவும் பாவித்து அநுபவித்தார். இவ்வண்ணம் பல ஒற்றுமைகள் பட்டநாத பரகாலர்களின் ப்ரபந்தங்களில் காணலாம்.

## திருமங்கையாழ்வாரின் பெரிய திருமொழி 10ஆம் பத்து அநுபவம்

திருமங்கையாழ்வாரின் பாசுரங்கள் நம்மிடமுள்ள அறிவின்மையாகிற இருளைப் போக்கும் விளக்கு. தொடர்ந்து வருகிற ஜந்மமாகிற நஞ்சுக்கு நல்ல அமுதம். எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்கிற ஐந்து இலக்கணங்களோடு கூடிய த்ராவிட சாஸ்த்திரத்திற்கு இலக்கியம். சகலவேதசாரம். பகவத் பாகவத விரோதிகளை ஆழ்வார் தம் திருக்கையாலே வாளைக் கொண்டு நிரசித்தார். தம் அருளிச்செயல் மூலம் இதரமதக்கொள்களை நிரசிக்கிறார். பரகால கவியின் பனுவல் கேட்டு தான் பெரிய பெருமாள் தினமும் பள்ளி கொள்கிறார் என்றால் அப்பனுவல்களுக்கு (பாசுரங்களுக்கு) எவ்வளவு ஏற்றம்.

பரகாலரின் பாசுரங்கள் அனைத்தும் பெருமை பொருந்தியவை ஆனாலும், பெரிய திருமொழி பத்தாம் பத்து தனிச்சிறப்பு வாய்ந்தது. 10ஆம் பத்தில் எல்லா பதிகங்களுமே பரமவிலசஷணமானவை.

`ஒருநல் சுற்றம்' பதிகத்திற்கு நிகரான ஒரு பதிகம் சொல்லமுடியோ? இதில் ஒவ்வொரு பாசுரத்திலும் இரண்டு இரண்டு திவ்யதேசங்களை அநுபவிக்கிறார் ஆழ்வார்.

பிறந்தகத்தில் நின்றும் புக்ககம் புறப்படுகின்ற திருமணப் பெண் தன் உறவினர் உள்ள இடமெங்கும் சென்று நான் போய் வருகிறேன் என்று சொல்லி வருவதுண்டு. அதுபோலே திருமங்கையாழ்வாரும் புக்ககமாகிய பரமபதத்தின் பயணத்திற்கு சித்தமாய் விட்டபடியால் தாம் மிகவும் ஈடுபாடு கொண்டு இருந்த சில திவ்யதேசங்களை சொல்லிக் கொள்ளப் புறப்பிடுகிறார் ஒருநல் சுற்றம் என்ற பதிகத்தில்.

மாதாபிதாக்களோ, உடன் பிறந்தவர்களோ, மற்றம் உள்ள பந்துக்களோ உண்மைனயான உறவினர் இல்லை. எம்பெருமான் ஒருவனே ஒப்பற்ற விலசஷண பந்து என்பதை இந்த பதிகத்தின் மூலம் உணர்த்துகிறார்.

நாலாயிர திவ்யபரபந்த அடைவில் பதிகம் முழுவதற்கும் ஒவ்வொரு பாட்டுக்கும் விஷயமான முதல் திவ்யதேசம் திருவெள்ளறை. கடைசி திவ்யதேசம் திருப்பேர்நகர் (அப்பக்குடத்தான் சந்நிதி). திருமங்கையாழ்வார் இந்த இரு திவ்யதேசத்தையும் கீழ் கண்ட (பெரிய திருமொழி 10-1-4) பாசுரத்தில் அனுபவிக்கும் அழகு மிகவும் அற்புதமானது.

துளக்கமில் சுடரை அவுணன் உடல்
பிளக்கும் மைந்தனைப் பேரில் வணங்கிப் போய்
அளப்பில் ஆரமுதை அமரர்க்கு அருள்
விளக்கினை சென்று வெள்ளறைக் காண்டுமே.

திருப்பேர்நகரை இந்தப் பாசுரத்தில் அனுபவித்துவிட்டு, இறுதியான பத்தாவது பாசுரத்திலும் மீண்டும் அனுபவிக்கிறார்.

பத்தாம் பாசுரம் (பெரிய திருமொழி 10-1-10)

பெற்றமாளியைப் பேரில் மணாளனை
கற்ற நூல் கவிகன்றி உரை செய்த
சொல் திறம் இவை சொல்லிய தொண்டர்கட்கு
அற்றம் இல்லை அண்டம் அவர்க்கு ஆட்சியே.

**திருப்பேர் நகரில் சேவை சாதிக்கும் எம்பெருமான் விஷயமாக இப்பத்துப் பாசுரம் அருளியதுபோல் உள்ளது.**

நம்மாழ்வார் பரமபதம் செல்ல சித்தமானவுடன் திருவாய்மொழியில் பத்தாம் பத்தில் திருப்பேர் எம்பெருமானையே கடைசியாக அனுபவித்தார். திருமங்கையாழ்வாரும் ஒருநல் சுற்றம் பதிகத்தில் பரமமதம் செல்லத்தாம் சித்தமாய் விட்டதாகத் திருவுள்ளம் பற்றுகிறபடியால் நம்மாழ்வார் போல் இவரும் திருப்பேர் நகரில் ஈடுபடுகிறார் போலும்!.

பத்தாம் பத்து 2,3 திருமொழிகளில் ராம விஜயத்தை எதிரிகள் பாசுரத்தால் அனுபவிக்கறார். தோற்றுப் போன ராசஷசர்களின் நிலையில் இருந்து ஸ்ரீராம ஜெயத்தைப்பேசி அனுபவிப்பது இவ்விரண்டு திருமொழிகளின் தனிச் சிறப்பு. தடம் பொங்கத்தம் பொங்கோ, குழமணி தூரம் என்ற இவ்விரு பதிகங்களில் பத ப்ரயோகங்கள் திருமங்கையாழ்வாருக்கே அசாதாரணமாகும்.

த்வேஷத்தின் எல்லையிலே இருந்த அரக்கர்களின் நிலையிலே நின்று ஸ்ரீராம விஜயத்தை அனுபவித்த ஆழ்வார், ப்ரேமத்தின் எல்லையிலே நின்ற யசோதைப்பிராட்டியை நான்காம் திருமொழியில் அனுபவிக்கிறார். பெரியாழ்வார் திருவெள்ளறை புண்டிரீகாசஷனை மிகவும் ஈடுபட்டுக் காப்பிட்ட காப்பிடல் பதிகத்தைப் போல திருமங்கையாழ்வாரும் சந்தமலர் (10-4) பதிகத்தில் காப்பிட்டுள்ளர் என்பதை இங்கு நமக்கு நினைக்கத்தோன்றுகிறது.

க்ருஷ்ணாவதாரத்தில் பெரியாழ்வார் யசோதா பாவனையில் முலையுண்ட பருவம், சப்பாணிப்பருவம் என்று அநுபவித்தாற்போல், திருமங்கையாழ்வாரும் பெரிய திருமொழியில் 4,5 திருமொழிகளில் அனுபவித்தது ஒப்பற்றது. 5ஆம் திருமொழியில் **செந்தாமரைக்கண்ணா** என்று ஆர்வத்தோடு அழைத்து புண்டரீகாசஷனைக் கைகொட்டி விளையாட அழைக்கிறார் ஆழ்வார்.

எம்பெருமானுடைய மேன்மைக்குணத்தையும், எளிமைக் குணத்தையும் **எங்காணும் மீதொப்பதோர் மாயமுண்டே** (10-6 திருமொழி) என்று தொடங்கி மிக ஆச்சர்யமாக அனுபவிக்கிறார் ஆழ்வார். வயிற்றை நிறைப்புவதற்காக ஆய்ச்சியர் உறிகளிலே சேமித்து வைத்த பால் தயிர் நெய் வெண்ணெய் ஆகியவற்றை விழுங்கி இன்று உரலோடு ஆப்புண்டிருக்கிறான் என்று ஒவ்வொரு பாசுரத்திலும் அனுபவிக்கும் அழகை என்னெவென்று உரைக்கவல்லோம்?

10-7 திருமொழியில் வெண்ணையையும் பெண்களையும் ஒக்க களவு காணும் பருவத்தை அனுபவிக்கிறார். மானமுடைத்து என்று தொடங்கும் இப்பதிகம் 14 பாசுரங்களைக் கொண்டது. மிகுதியான பாசுரங்களைப் பெற்ற இப்பதிகத்தில், க்ருஷ்ணா அவதார சேஷ்டிதங்களைத் தவிர வேறு அவதாரத்தின் வைபவம் சிறிதும் இல்லை என்பது இப்பதிகத்தின் தனிச் சிறப்பு.

10-8 திருமொழி - காதிற் கடிப்பிட்டு என்னும் இப்பதிகத்தில் ஓர் ஆய்ச்சி பாவனையில் பேசுகிறார் ஆழ்வார்.

நெடும்போது கண்ணனை எதிர்பார்த்துக் கொண்டு இருந்த ஓர் ஆய்ச்சி காலம் கடந்து வந்த கண்ணபிரானை நோக்கி தக்கார் பலர் தேவிமார் சாலவுடைய பெரியவரே! இங்கு ஏதுக்கு எழுந்தருளிற்று? பதினாறாம் ஆயிரவர் தேவிமார் பணிசெய்ய வீற்றிருக்கும் மணவாளர் ஆயிற்றே தேவரீர். நாங்கள் இப்போது உமக்கு ஒரு சரக்கல்லவே. அங்கேயே எழுந்தருளலாம் என்று கடும்வார்த்தை சொல்லி ஏசினாள். அதற்கு கண்ணன் காதில் குண்டலமிட்டுக் கொண்டும், அரையில் திருப்பரிவட்டத்தைச் சாத்திக் கொண்டும், அழகியதிருத்துழாய் மாலை அணிந்து கொண்டும் வரவேண்டுகையாலே சிறிது தாமதம் ஆயிற்று என்றான். அதற்கு ஆய்ச்சி வெறும் காதே பரமபோக்கிய மாயிற்றே குண்டலம் வேணுமோ? புழுதியடைந்த பொன்மேனியை நாங்கள் மிகவும் விரும்பியிருக்க அதை வஸ்த்ரம் உடுத்திக் கொண்டு அழகை மறைக்கவேணுமோ? சர்வகந்த: என்கிறபடியே திருமேனியே பரிமளத்தோடு கூடியிருக்க திருத்துழாய் பரிமளத்தை ஏறிடவேணுமோ? இருந்தபடியே உகக்கிற எங்களுக்கு இந்த ஒப்பனைகள் தேவையோ? ஏதுக்கு இதுவென் இதுவென் இதுவென்னோ? என்று கண்ணனுக்கு முகம் கொடாமல் ஓர் ஆய்ச்சி ப்ரணயரோஷத்துடன் பேசின ஊடல் திறத்தை வெளியிடும் இப்பதிகம் ஓர் ஆச்சர்யமான பதிகம் ஆகும்.

10-9 திருமெழி - புள்ளுருவாகி என்ற இந்த திருமொழி பழமொழியால் பணிந்துரைத்த பாட்டுக்களைக் கொண்டது. ஒவ்வொரு பாட்டிலும் காணப்படும் பழமொழி சுவைத்து இன்புறத்தக்கது. பெரிய திருமொழியில் இப்பதிகம் அளவில் மிகவும் சிறியது. பாசுரம் தோறும் முதலடியும் ஈற்றடியும் ஒன்றாக இருப்பது ஓர் தனிச்சிறப்பு.

10-10 திருமொழி - இத்திருமொழி அனுபவம் என்பது ஓர் ஒப்புயர்வற்ற அனுபவமாகும். தலைமகனைப் பிரிந்த தலைமகள் ஆற்றாது கூறிய பாசுரம்.
கலியனது ஒலிமாலை செஞ்சொலால் எடுத்த தெய்வநன்மாலை என்பது உண்மையே. செம்மைப் பனுவல் நூல் (10-4-10) என்று திருமங்கையாழ்வார் தாமே கொண்டாடும்படியான மிகச்சிறந்த சாஸ்த்ரம் அவரது அருளிச்செயலாகும். கோவைத் தமிழால் கலியன் சொன்ன சொல் வல்லார்க்கு அல்லல் இல்லை. நம் கொடுவினைகள் முழுவதும் அகலும் என்பது திண்ணம். உலகில் என்னிலாத பேரின்பம் பெறுவது உறுதி. இப்படி வைபவம் படைத்த திருமங்கையாழ்வார் திருவடிகளுக்குப் பல்லாண்டு பாடி மகிழ்வோம்.

மேலே சொன்ன விஷங்கள் அம்மாள் ஸ்ரீ.உ.வே. சௌம்யநாராயணாசார் ஸ்வாமி மேலத்திருமாளிகை திருவெள்ளறை அருளியுள்ள திருமங்கையாழ்வாரின் பெரிய திருமொழி 10ஆம் பத்து அநுபவம் என்னும் கட்டுரையில் இருந்து எடுக்கப்பட்டது.

## திருமங்கையாழ்வார் நம்பெருமாளுக்குச் செய்த கைங்கர்யங்கள்

திருமடைப்பள்ளி, திருநடைமாளிகை, ஆலிநாடன் திருமண்டபம், திருக்கொட்டாரம், ஐந்து களஞ்சியம், இரண்டு திருமதிள்கள், திருக்கோபுரம். (பெரியதிருவடி யடைவு)

## திருமங்கையாழ்வாரின் திருமாளிகை இருந்த இடம்

நம்பெருமாள் கோயிலிலே வடதிருக்காவேரி தீரத்திலே திருப்பாற்றுறையிலே இவர் திருமாளிகை அமைந்திருந்தது. இவர் நம்பெருமாள் நியமனத்தினாலே திருக்குறுங்குடியிலே திருநாடுக்கெழுந்தருளினார். (பெரியதிருவடி யடைவு)

## மங்கள ஸ்லோகம்

ஸ்ரீமதாலிஸ்ரீநகரீ நாதாய கலிவைரிணே
சதுஷ்கவி ப்ரதாநாய பரகாலாய மங்களம்

## நம்பிள்ளை



புகைப்படம் உதவி : காஞ்சிபுரம் கோமடம் ஸ்ரீ ஸ்ரீநாத் ஸ்வாமி

## தனியன்

வ்ருஸ்சிகே க்ருத்திகாஜாதம் கலிவைரி குரும்பஜே /
வேதாந்திமுநி பாதாப்ஜஶ்ரீதம் ஸூக்தி மாஹர்ணவம் //

வேதாந்த வேத்யாம்ருத வாரி ராஸோ் வேதார்த்த ஸாராம்ருத பூரமக்ர்யம் /
ஆதாய வர்ஷந்த மஹம் ப்ரபத்யே காருண்யபூர்ணம் கலிவைரி தாஸம் //

## வாழித்திருநாமம்

தேமருவும் செங்கமலத் திருத்தாள்கள் வாழியே
திருவரையில் பட்டாடை சேர்மருங்கும் வாழியே
தாமமணி வடமார்பும் புரிநூலும் வாழியே
தாமரைக்கை யினையழகும் தடம்புயமும் வாழியே
பாமருவுந் தமிழ்வேதம் பயில்பவளம் வாழியே
பாடியத்தின் பொருள் தன்னைப் பகர்நாவும் வாழியே
நாமநுதல் மதிமுகமும் திருமுடியும் வாழியே
நம்பிள்ளை வடிவழகும் நாடோறும் வாழியே.

காதலுடன் நஞ்சீயர் கழல்தொழுவோன் வாழியே
கார்த்திகைக் கார்த்திகை யுதித்த கலிகன்றி வாழியே
போதமுட னாழ்வார் சொற் பொருளுரைப்போன் வாழியே
பூதூரான் பாடியத்தைப் புகழுமவன் வாழியே
மாதகவா லெவ்வுயிர்க்கும் வாழ்வளித்தான் வாழியே
மதிளரங்க ரோலக்கம் வளர்த்திட்டான் வாழியே
நாதமுனி யாளவந்தார் நலம் புகழ்வோன் வாழியே
நம்பிள்ளை திருவடிகள் நாடோறும் வாழியே.

## உபதேசரத்தினமாலையில் இடம்பெற்றுள்ள இவரை பற்றிய பாசுரங்கள் 43, 44, 48, 50, 51, 66 பாசுரங்கள்

நம்பிள்ளை தம்முடைய நல்லருளாயேவியிட
பின்பெரிய வாச்சான்பிள்ளை யதனால் - இன்பா
வருபத்தி மாறன் மறைப்பொருளைச் சொன்னது
இருபத்து நாலாயிரம்.

தெள்ளியதா நம்பிள்ளை செப்பு நெறிதன்னை
வள்ளல் வடக்குத்திருவதீப் பிள்ளை . இந்த
நாடறிய மாறன் மறைப்பொருளை நன்குரைத்தது
ஈடுமுப்பத்தாறாயிரம்.

சீரார் வடக்குத் திருவீதிப்பிள்ளை. எழு
தேரா தமிழ் வேதத்தீடுதனைத் - தாருமென
வாங்கிமுன்நம்பிள்ளை யீயுண்ணி மாதவர்க்குத்
தாம் கொடுத்தார். பின்னதனைத்தான்.

நம்பெருமாள் நம்மாழ்வார் நஞ்சீயர் நம்பிள்ளை
யென்பர். அவரவர்தம் மேற்றத்தால் - அன்புடையோர்
சாற்றுதிருநாமங்கள் தானென்று நன்னெஞ்சே
ஏத்ததனைச்சொல்லிநீ யின்று.

துன்னுபுகழ்க் கந்தாடைத்தோழப்பர் தம்முகப்பால்
என்னவுலகாரியனோ வென்றுரைக்க – பின்னை
உலகாரியனெனும்பேர் நம்பிள்ளைக்கோங்கி
விலகாமல் நின்றதென்றும்மேல்.

பின்பழகராம்பெருமாள் சீயர். பெருந்திவத்தில்
அன்பதுவுமற்று மிக்கவாசையினால் - நம்பிள்ளைக்
கானவடிமைகள்செய் யந்நிலையை நன்னெஞ்சே
ஊனமற வெப்பொழுதுமோர்.

இவர் செய்தருளின க்ரந்தங்கள் முதல் நான்கு திருவந்தாதிகளுக்கு வ்யாக்யானம், திருவிருத்தத்துக்கு ஈடு, கண்ணிநுண்சிறுத்தாம்புக்கு ஈடு, மைவண்ண நறுங்குஞ்சி வ்யாக்யானம், திருபல்லாண்டு ஈடு, ஸ்ரீவைஷ்ணவ ப்ரகாரம் முதலானவை. இவருடைய திருநாமம் - நம்பூர் வரதர்; ஆசார்யர் - நஞ்சீயர்

**திருவரங்கத்தில் நம்பிள்ளையின் காலசேஷபத்தை கேட்க கூட்டம் அலை மோதும். மக்கள் கூட்டத்தைப் பார்ப்பவர்கள் `நம்பெருமாள் கோஷ்டியோ நம்பிள்ளை கோஷ்டியோ' என்று வியந்து பேசுவார்கள்.**

பிள்ளைலோகம் ஜீயர் நம்பிள்ளையின் பெருமைகளைப்பற்றி கூறியுள்ளார்.
அவற்றை கீழே அனுபவிப்போம்.

1)லோகாசார்யன் என்று திருநாமம் பெற்றது தன்னேற்றம்.
2) அரிய அருளிச்செயலின் பொருள்களை அறிந்து உலகோர்க்கு எடுத்து உரைத்தது மற்றொரு தன்னேற்றம்.
3) பரமபதம் தம் சிறுமுறிக்குச் செல்லப்பெற்ற தன்னேற்றமும் நம்பிள்ளைக்கன்று மற்றொரு வருக்கும் இல்லை.
4) பிள்ளை லோகாசாரியர், அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் திருவவதாரம் செய்வதற்கு காரணகர்த்தவாக இருந்ததுவும் ஒரு தன்னேற்றம்.

<u>நம்பிள்ளை ஒரு அம்மையாருக்கு பரமபதத்திலே ஒரு மனையிடம் கொடுக்கச் சொல்லி பரமபதநாதனுக்கு சாஸனம் எழுதிக் கொடுத்தல்</u>

மேலே குறிப்பிட்ட மூன்றாவது பெருமையைப் பற்றி பின்பழகிய பெருமாள் ஜீயர் அருளியுள்ள ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவாத்தில் நம்பிள்ளை வாழ்வில் நடந்த ஒரு சுவையான சம்பவத்தை குறிப்பிட்டுள்ளார். அதை கீழே காண்போம்.

நம்பிள்ளையும் முதலிகளுமாகக் கோயிலிலே எழுந்தருளியிருந்து ஸ்ரீவைஷ்ணவ தரிசனத்தை நிர்வஹித்துக் கொண்டு வாழ்கின்ற காலத்தில், நம்பிள்ளை கோஷ்டியில் இடம் பெற்று ஞானலாபம் பெற்ற ஓர் அம்மையார் நம்பிள்ளை திருமாளிகைக்கு அடுத்த மனையில் வாழ்ந்து வந்தார். ஒரு நாள் அவருடன் சேர்ந்து காலசேஷபம் கேட்ட ஒரு ஸ்ரீவைஷ்ணவர் அம்மையே! நம்பிள்ளை திருமாளிகையில் இருப்பதற்கு நெருக்க மாயிருக்கிறது. உம்முடைய மனையை ஆசாரியருக்கு ஸமர்ப்பியும் என்று பலமுறை அருளிச்செய்தார். அவரும் ஸ்வாமி கோயிலிலே ஒருகோல் மனை யாருக்குக் கிடைக்கும்? நான் இருக்கும் வரை யாருக்கும் என் மனையைக் கொடுக்கமாட்டேன் என்று பிடிவாதமாகக் கூறிவிட்டாள். அந்த வார்த்தையை அவர் நம்பிள்ளையிடம் தெரிவித்தார். நம்பிள்ளையும் அவளை அழைத்து உனக்கு ஒரு சரீரத்தை சாய்ப்பதற்கு வேண்டிய இடம் போராதா? இங்கு முதலிகள் எழுந்தருளி இருக்க நெருக்கமாயிருக்கிறது. உன்னுடைய ஒரு கோல் மனையையும் நமக்குத் தரவேணும் என்று கேட்டார். அந்த அம்மையார் அதற்கு அப்படியே செய்கிறேன் ஆனால் தேவரீர் பரமபதத்திலே அடியேனுக்கு ஒரு மனையிடம் அதற்கு விலையாகத் தரவேண்டும் என்றாள். நம்பிள்ளை அதற்கு அம்மா! அவ்வாறு அங்கு இடம் கொடுக்க வேண்டியவன் பரமபதநாதன் அல்லவா? அவனுக்கு விண்ணப்பம் செய்து வாங்கித்தருகிறேன் என்று பதில் சொன்னார். அவளும் அதைக்கேட்டு ஸ்வாமி ! அடியேன் ஒன்றும் அறியாத ஸாது, பெண் ஜன்மம். தருகிறோம் என்று சொன்னால் போராது எழுதிக் கையெழுத்து போட்டு தரவேண்டும் என்று வேண்டினாள்.

அவள் அவ்வாறு கேட்டதும் நம்பிள்ளை மிகவும் மகிழ்ந்து ஒரு ஓலையை எடுத்துத் தம் ஸம்மதத்தை இவ்வாறு எழுதினார். இன்ன வருஷம், இன்ன மாதம், இன்ன தேதியில் இந்த அம்மையாருக்குத் திருக்கலிகன்றிதாஸன் பரமபதத்திலே ஒரு கோல் மனை இடம் எழுதிக்கொடுத்தேன். அகில உலகங்களுக்குக் கெல்லாம் ஸ்வாமியுமான பரமபதநாதன் கிரயம் செலுத்திக் கொடுத்தருளவேணும் என்று சாஸனம் எழுதிக் தம்முடைய கையெழுத்தையும் சாத்திக் கொடுத்தார். அவ்வம்மையாரும் திருமுகத்தைத் தலைமேல் தாங்கி மகிழ்ச்சிப் பெருக்குடன் வாங்கிக்கொண்டு தீர்த்த ப்ரசாதங்களும் பெற்றுக்கொண்டு அன்றும் மற்ற நாளும் நம்பிள்ளையை சேவித்துக்கொண்டு இருந்து மூன்றாம் நாள் பரமபதம் சென்றாள்.

<u>நம்பிள்ளை காலசேஷப கோஷ்டியின் மகிமை</u>

ஸ்ரீரங்கம் கோயிலில் நம்பிள்ளை காலசேஷபம் செய்த இடம் பெரிய திருமண்டபத்துக் கீழ்பாகம் (சேனை முதலியார் ஸந்நதிக்கு எதிரே உள்ள நாலுகால் மண்டபம்). காலசேஷபம் ஸாதிக்கும் இவரைக் காணவேணுமென்று படுத்திருக்கும் பெரியபெருமாள் எழுந்துவந்து ஜய, விஜயர்கள் (துவரபாலகர்கள்) வாசலில் எட்டிப் பார்ப்பராம். அப்போது ஸந்நதி வாசல் காக்கும் திருவிளக்குப்பிச்சன் என்பவர் மேல் உராய் வராம். அவரும் இதென்ன கார்யம்! போய் படுத்துக்கொள்ளும்! நாங்கள் தான் நம்பிள்ளையை அனுபவிக்க பாக்கியம் செய்தவர்கள். நீரல்லீர் போம்! என்பாராம். அவரும் போய் படுப்பாராம். இப்படிப் பலமுறைகள் நடப்பதுண்டு என்று பெரியோர்கள் பணிப்பர். மேல் குறிப்பிட்ட நிகழ்ச்சியை இந்த ஸம்ப்ரதாயத்தில் ஊற்றம் உள்ளவர்களே ஒப்புக்கொண்டது.

(ஸ்ரீ உ.வே ஸதாபிஷேகம் ஸ்வாமி அருளியுள்ள நம்பிள்ளை வைபவம் என்கிற கட்டுரையிலிருந்து எடுக்கப்பட்டது)

நம்பிள்ளையின் அவதார மகிமையும் அவர் திருமாளிகை இருந்த இடம் பற்றிய விவரமும்

நம்பிள்ளையை திருமங்கையாழ்வார் அவதாரமாகவே அடியார்கள் போற்றினார்கள். திருமங்கையாழ்வார் அவதரித்த கார்த்திகை மாதம் திருக்கார்த்திகை நன்னாளில் நம்பிள்ளை திருவவதரித்தார். தம்முடைய ஆசார்யர் நஞ்ஜீயரை ஆச்ரயித்த போது அவரால் **திருக்கலிகன்றி தாசர்** என்ற தாஸ்யநாமம் இடப்பெற்றார்.

ஆதிகேசவப் பெருமாள் ஸந்நதியின் வடக்கு மாடத்திருவீதியில் வசித்துவந்த நம்பிள்ளையின் திருவடிகளில் சிஷ்யராக இருந்து விசேஷ அர்த்தங்களை கேட்டு அறிந்தவர்களில் பெரியவாச்சான் பிள்ளை, வடக்குத்திருவீதிப் பிள்ளை, நடுவில் திருவீதிப் பிள்ளை பட்டரும் (பெரியபட்டர் திருக்குமரார்) மிக முக்கியமானவர்கள். நம்பிள்ளைக்கு **மாடத்திருவீதிப்பிள்ளை** என்னும் ஒரு திருநாமம் உண்டு என்பர்.

பிள்ளைலோகம் ஜீயர் வடக்குத்திருவீதியானது ஆதிகேசவப்பெருமாள் கோயிலுக்கு (கொள்ளிடக்கரையில் அமைந்து இருந்தது) அடுத்து தவராசன் துறைக்கு அணித்தானது என்றும் கூறுவர். ஆதிகேசவப்பெருமாள் ஸந்நிதியும் சுற்றுப்புறத் திருவீதிகளும் காவிரியின் வெள்ளப்பெருக்குகளால் மூழ்கி அழிந்தன. இன்றும் அந்த பகுதியில் இடிந்த சுவர்களையும் தூண்களையும் காணமுடிகிறது.

திருவரங்கத்தில் ஆளவந்தார் படித்துறைக்குக் கிழக்கே அமைந்துள்ளது தவராசன் (ஸ்ரீராமாநுஜர் என்பது பொருள்) படித்துறை. தவராசன் படித்துறைக்கு செல்லும் வழியில் அமைந்திருந்தது ஆதிகேசவப்பெருமாள் திருக்கோயில். இந்தத் திருக்கோயில் சோழர் காலத்தில் கட்டப்பட்டது.

பண்டைய காலங்களில் அந்தரங்க கைங்கர்ய பரர்களும் சில குறிப்பிடத்தக்க ஆசார்ய புருஷர்கள் மட்டுமே உள்துறைவீதி (உத்திரை வீதி) மற்றும் சித்திரை வீதிகளில் குடியிருந்தனர்.

வடகிழக்கு மூலையில் அமைந்திருந்தது ஆதிகேசவப் பெருமாள் கோயில். திருக்கோயிலைச் சுற்றிய வீதிகளில் தான் நம்பிள்ளை, பெரியவாச்சான் பிள்ளை, வடக்குதிருவீதிப்பிள்ளை, பிள்ளைலோகாசாரியர், அழகிய மணவாளப்பெருமாள் நாயனார், நடுவில் திருவீதிப் பிள்ளை பட்டர் திருமாளிகைகள் அமைந்திருந்தன. மாமுனிகள் திருப்பள்ளிப்படுத்தப்பட்டது தவராசன் படுகை என்ற இடமாகும். தவராசன் என்ற திருநாமம் ஸ்ரீராமானுஜரைக் குறிக்கும். எம்பார் அருளியுள்ள பெரிய திருமொழித் தனியனில் குறிப்பிடபட்டுள்ள **சங்கை கெடுத்தாண்ட தவராசா !** என்ற சொல் தொடர் இதற்கு விளக்கமாக அமைந்துள்ளது.

(இந்த குறிப்பினை பிள்ளைலோகம் ஜீயர் யதீந்த்ரப்பரவணப்ரபாவத்தில் தந்துள்ளார்)

**மேலே சொன்ன விஷயங்கள் மதுரை பேராசிரியர் முனைவர் ஸ்ரீ.உ.வே இரா.அரங்கராஜன் ஸ்வாமி தொகுத்து அருளியுள்ள மன்னுபுகழ் மணவாளமாமுனிவன் என்கிற நூலில் இருந்து எடுக்கப்பட்டது.**

## நம்பிள்ளையின் திருநாவீறு

உரை ஆசிரியர்களில் தலையானவர் நம்பிள்ளை எனும் ஆசார்யர். திருவாய்மொழிக்கு இவரது உரை ஈடு முப்பத்தாராயிரப்படி புகழ்பெற்று விளங்குகிறது. அன்றாடம் காலசேஷபரீதியிலே இவ்வாசார்யர் திருவாய் மலர்ந்தருளிய அர்த்தங்களை அந்த அடைவிலேயே தம் திருஉள்ளத்திலே தேக்கிவைத்து இரவோடு இரவாகப் பட்டோலை கொண்டு நமக்கு உபகரித்தவர் இவரது சீடரான வடக்குத்திருவீதிப்பிள்ளை என்கிற ஆசார்யர் (பிள்ளைலோகாசார்யரின் திருத்தகப்பனார்). இவ்வாறு பல மாமேதைகளின் வாயிலாக அவதரித்த ஈடு எனும் ஒப்பற்ற நூலின் மாண்பு இத்தகையது என்று மந்தமதிகளான நம்போல்வாரால் அறிந்துகொள்ள முடியுமோ? நம்பிள்ளை தமது ஆசார்யரான நஞ்சீயரிடம் நூறுமுறை திருவாய்மொழியின் அர்த்தத்தைக்கேட்டு உணர்ந்தவர்.

நம்பிள்ளையின் கல்வி அறிவி எப்படிப் பட்டது என்று அவரது சீடருள் முக்யமானவரான பெரியவாச்சான்பிள்ளை எனும் ஆசாரியரின் திருவாக்கால் ஓரளவு அறியலாம்.

பெரியவாச்சான் பிள்ளை பெரிய திருமொழி ஏழை ஏதலன் பதிகத்தில் ஓதுவாய்மையும் உவனியப் பிறப்பும் (5-8-7 பாசுரம்) என்கிற பாசுரத்தின் வ்யாக்யானத்தில் உள்ளவரிகள் **முற்பட த்வயத்தைக் கேட்டு, இதிஹாஸ புராணங்களையும் அதிகரித்து, பரபசஷப்ரதிசேஷபத்துக்கு உடலாக ந்யாயமீமாம்சைகளும் அதிகரித்து, போது போக்கும் அருளிச் செயலிலேயாம்படி பிள்ளையைப் போலே அதிகரிப்பிக்க வல்லவனையிறே ஒருத்தன் என்பது.** இங்கு பிள்ளை என்றது நம்பிள்ளையைக் குறிக்கும். ஸ்ரீக்ருஷ்ணனுக்குக் கல்வி கற்பித்த சாந்தீபனிக்கு ஒப்பாக நம்பிள்ளையைக் குறித்தது இங்கு உற்று நோக்கத்தக்கது. இப்படி முறையாகக் கல்வி பயின்று, ஆசார்யரின் அருளையும் பூர்ணமாகப்பெற்று, தாம் பயின்றதைப் பிறரும் அறிய வேண்டும் என்கிற பெரும் கருனை கொண்ட நம்பிள்ளையின் திருவாக்கில் நாமகள் நர்த்தநம் ஆடுகிறாள் என்றால் மிகையாகாது. மகாகவிகளின் சொற்களும் சொல்லாட்சியும் இவரது திருவாக்கில் நிறைந்திருக்கும்.

**மேலே சொன்ன விஷயங்கள் அடியேன் தமயன் வைகுண்ட வாசி கோயில் ஆத்தான் ஸ்ரீ விஜயராகவன் ஸ்வாமி எழுதிய நம்பிள்ளையின் திருநாவீறு என்ற கட்டுரையில் இருந்து எடுக்கப்பட்டது.**

**நம்பிள்ளையின் வைதுஷ்யத்துக்கும், குணபூர்த்திக்கும் ஒரு எடுத்துக்காட்டு**

தம் குலத்தையிட்டுப் பெருமை பாராட்டிய ஒருவர் நஞ்ஜீயரிடம் வந்து, அடியேன் உம்முடைய காலக்ஷேப கோஷ்டியில் அந்வயிக்க விரும்பாததால், அடியேனுக்குத் தனியாக தர்சந ப்ரமேயார்த்தங்களை சாதிக்க வேணும் என்று ப்ரார்த்தித்தார். பரம உதாரரான நஞ்ஜீயர் அதற்கு சம்மதித்து, நீர் நம்பிள்ளையிடம் கேளும். அவர் நம்மைவிட விஸ்தாரமாக சாதிப்பர் என்று நியமிக்க, வந்தவர் அவரை தண்டனிடவேண்டுமே என்று தயங்க, ஜீயரும் அப்படி நிர்ப்பந்தமில்லை என்று சொல்லி, நம்பிள்ளையிடம் அவர் உம்மை தண்டனிடமாட்டார். ஆசார்ய நியமநம் இது என்று சொல்லும் என்று நியமிக்க, நம்பிள்ளையும் அப்படியே திருவிருத்தம் சொல்லி முடித்து திருவாய்மொழியில் பயிலும் சுடரொளிமூர்த்தியைப் (திருவாய்மொழி 3ஆம் பத்து 7ஆம் திருவாய்மொழி 1ஆம் பாசுரம்) பதிகத்தின் அர்த்த விசேஷங்களை விஸ்தாரமாக அநுபவிக்கச் செய்தார். கேட்டிருந்தவர் பாகவத ப்ரபாவத்தை மெய்யே உணர்ந்து நம்பிள்ளையை தண்டனிடப்புகுந்தார். நம்பிள்ளை இதற்கு ஆசார்ய நியமநம் தேவை என்று சொல்லி காலக்ஷேபத்தை நிறுத்தி விட்டார். சிஷ்யரும் நஞ்ஜீயரிடம் சென்று அடியேன் நெஞ்சில் இருந்த மருள் அகன்றது. நம்பிள்ளையை அடியேன் தண்டனிடுவதை ச்வீகரிக்கும்படி சொல்லியருள வேணும் என்று ப்ரார்த்தித்தார். ஜீயரும் பிள்ளையிடம் விஷயத்தைச் சொல்லி காலக்ஷேபத்தை தொடர்ந்து நடத்தி முடிக்கும்படி நியமித்தார்.

மேலே சொன்ன விஷயங்கள் ஸ்ரீ உ.வே Dr.v.v. ராமானுஜம் ஐயங்கார் ஸ்வாமி எழுதியுள்ள நம்பிள்ளை வைபவம் என்னும் கட்டுரையில் இருந்து எடுக்கப்பட்டது.

திருமங்கை ஆழ்வார், நம்பிள்ளை திருவடிகளே சரணம்

வாசிக த்தோஷ: க்ஷந்தவ்ய:

ஸ்ரீ :
ஸ்ரீமதே ராமானுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:
ஸ்ரீமத் வரத குரவே நம:

**திருப்பாணாழ்வார் - வருஷ திருநட்சத்திரம் - கார்த்திகை – ரோஹிணி**



திருப்பாணாழ்வார், திருவுறையூர், திருவடியில் எம்பெருமானார் திருவடியின் அருகில் மணவாளமாமுனிகள்

## தனியன்

வ்ருஸ்சிகே ரோஹிணீ ஜாதம் ஸ்ரீபாணம் நிசுளாபுரே /
ஸ்ரீவத்ஸாங்கம் காயகேந்த்ரம் முனிவாஹநமாஸ்ரயே //

ஆபாதசூடம் அநுபூய ஹரிம் ஸயாநம்
மத்யே கவேர துஹிதுர் முதிதாந்தராத்மா /
அத்ரஷ்ட்ருதாம் நயநயோர் விஷயாந்தரணாம்
யோ நிஸ்சிகாய மநவை முநிவாஹநம் தம் //

## நாள்பாட்டு – உபதேசரத்தினமாலை 10 ஆம் பாசுரம்

கார்த்திகையுரோகிணி நாள் காண்மினின்றுகாசினியீர்
வாய்த்தபுகழ்ப்பாணர் வந்துதிப்பால் - ஆத்தியர்கள்
அன்புடனேதான் அமலனாதிபிரான் கற்றதற்பின்
நன்குடனே கொண்டாடும்நாள்.

## வாழித்திருநாமம்

உம்பர்தொழும் மெய்ஞ்ஞானத் துறையூரான் வாழியே
உரோகிணிநாள் கார்த்திகையிலுதித்த வள்ளல் வாழியே
வம்பவிழ்தார் முனிதோளில் வந்தபிரான் வாழியே
மலர்க்கண்ணில் வேறொன்றும் வையாதான் வாழியே
அம்புவியில் மதிளரங்க ரகம்புகுந்தான் வாழியே
அமலனாதிரான் பத்து மருளினான் வாழியே
செம்பொனடி முடியளவும் சேவிப்போன் வாழியே
திருப்பாணன் பொற்பதங்கள் செகதலத்தில் வாழியே.

திருவவதாரஸ்தலம் - திருவுறையூர், திருவவதாரம் - நெல்லுக்கதிரிலே அயோநி ஸம்பவராய் அவதரித்தார்
திருநாமங்னள் - திருபாணழ்வார், பாண் பெருமாள், பாணர், யோகிவாஹனர், காயகஸார்வ பௌமர், முனிவாஹணர், வித்யை கானவித்யை
ஆசார்யர் - சேனைமுதலியார், சிஷ்யர் - ஸாரங்கமுனி
இவர் மங்களாசாசனம் செய்த திருப்பதிகள் - கோயில், திருமலை
அருளிச்செய்த ப்ரபந்தம் - அமலனாதிபிரான் - 10 பாசுரங்கள்

இந்த ப்ரபந்தத்தின் அரும்பொருள்கள் பெரியவாச்சான்பிள்ளை, அழகிய மணவாளப் பெருமாள் நாயனார், ஸ்ரீவேதாந்தாசார்யர் என்னும் மூன்று மஹாசார்யர்கள் அருளிய வ்யாக்யானங்களிலே காணலாம்.

**ரோஹிணி திருநட்சத்திரத்தில் அவரித்த மற்ற எம்பெருமான், ஆசார்யர்கள் :**

**பெரிய பெருமாள், கண்ணன், திருக்கோட்டியூர் நம்பி, பெரியவாச்சான் பிள்ளை, நாயனாராச்சான் பிள்ளை, எங்களாழ்வான்**

## திருப்பாணாழ்வார் அருளியுள்ள அமலனாதிபிரான்

### தனியன்

#### பெரிய நம்பிகள் அருளியச்செய்தது

ஆபாதசூடம் அநுபூய ஹரிம் ஸயாநம்
மத்யே கவேர துஹிதுர் முதிதாந்தராத்மா /
அத்ரஷ்ட்ருதாம் நயநயோர் விஷயாந்தரணாம்
யோ நிஸ்சிகாய மநவை முநிவாஹநம் தம் //

#### திருமலை நம்பிகள் அருளிச்செய்தது

காட்டவே கண்ட பாத கமலம் நல்லாடை உந்தி
தேட்டரும் உதர பந்தம் திருமார்பு கண்டம் செவ்வாய்
வாட்டமில் கண்கள் மேனி முனி ஏறித் தனி புகுந்து
பாட்டினால் கண்டு வாழும் பாணர் தாள் பரவினோமே.

**அமலனாதிபிரான் பாசுரங்கள் (பெரிய பெருமாளது திருமேனி அழகில் பாதாதி கேசாந்தமாக அனுபவித்தல்)**

அமலனாதிபிரான் அடியார்க்கு என்னை ஆட்படுத்த விமலன்
விண்ணவர் கோன் விரையார் பொழில் வேங்கடவன்
நிமலன் நின்மலன் நீதி வானவன் நீதி வானவன் நீள் மதிள் அரங்கத்தம்மான்
**திருக்கமல பாதம்** வந்து என் கண்ணினுள்ளன ஒக்கின்றதே. 1.

உவந்த உள்ளத்தனாய் உலகம் அளந்து அண்டமுற
நிவந்த நீள் முடியன் அன்று நேர்ந்த நிசாசரை
கவர்ந்த வெங்கணைக் காகுத்தன் கடியார் பொழில் அரங்கத்தம்மான்
**அரைச் சிவந்த ஆடையின்** மேல் சென்றதாம் என சிந்தனையே. 2.

மந்திபாய் வட வேங்கட மாமலை வானவர்கள்
சந்தி செய்ய நின்றான் அரங்கத்து அரவினணையான்
அந்தி போல் நிறத்தாடையும் அதன் மேல் அயனைப் படைத்ததோர் எழில்
**உந்தி மேலதன்றோ** அடியேன் உள்ளத்தின்னுயிரே 3.

சதுரமாமதிள்சூழ் இலங்கைக்கிறைவன் தலைபத்து
உதிரவோட்டி. ஓர் வெங்கணை உய்த்தவன் ஒத வண்ணன்
மதுரமா வண்டு பாட மாமயில் ஆடரங்கத்தம்மான். திருவயிற்று
உதர பந்தம் என் உள்ளத்துள் நின்று உலாகின்றதே. 4.

பாரமாய பழவினை பற்றறுத்து என்னைத்தன்
வாரமாக்கிவைத்தான் வைத்ததன்றி என்னுள் புகுந்தான்
கோராமாதவம் செய்தனன் கொல் அறியேன் அரங்கத்தம்மான் திரு
வார மார்பதன்றோ. அடியேனை ஆட்கொண்டதே. 5

துண்ட வெண்பிறையன் துயர்தீர்த்தவன். அஞ்சிறைய
வண்டு வாழ் பொழில் சூழ் அரங்கநகர் மேயஅப்பன்
அண்டரண்டபகிரண்டத்து ஒருமாநிலம் எழுமால் வரை
உண்ட கண்டம் கண்டீர் அடியேனை உய்யக் கொண்டதே. 6.

கையினார் சுரிசங்கனல் ஆழயர். நீள்வரைபோல்
மெய்யனார் துளப விரையார் கமழ் நீள்முடிஎம்
ஐயனார். அணி அரங்கனார் அரவின் அணைமிசைமேயமாயனார்
செய்யவாய் ஐயோ! என்னைச் சிந்தை கவர்ந்ததுவே. 7.

பரியனாகி வந்த அவுணன் உடல் கீண்ட. அமரர்க்கு
அரிய ஆதிப்பிரான் அரங்கத்தமலன் முகத்து
கரியவாகிப் புடை பரந்து மிளிர்ந்து செவ்வரி ஓடி. நீண்ட அப்
பெரியவாய கண்கள் என்னைப்பேதைமை செய்தனவே. 8.

ஆலமா மரத்தின் இலைமேல் ஒருபாலகனாய்
ஞாலம் ஏழும் உண்டான் அரங்கத்து அரவினணையான்
கோலமாமணி ஆரமும் முத்துத்தாமமும் முடிவில்லதோர்எழில்
நீலமேனி ஐயோ! நிறைகொண்டது என் நெஞ்சினையே. 9.

கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெ
யுண்ட வாயன். என் உள்ளம் கவர்ந்தானை
அண்டர் கோன் அணி அரங்கன். என் அமுதினைக்
கண்ட கண்கள் மற்றென்றினைக் காணாவே. 10.

அமலனாதிபிரானின் ஸாராத்தம்

முதல் பாசுரம்

கைக்குழந்தைக்குத் தாய்முலை போலே, சேஷபூதனுக்கு தாரக போஷக போக்யமாய் இருக்கும் திருவடிகளின் அழகு தம்மை அடிமை கொண்டதைப்பேசினார் இப்பாசுரத்தில்.

## இரண்டாம் பாசுரம்

கடல் வண்ணனுடைய திருவடிகளிருந்து சிவந்த ஆடையின்மேல் தம் சிந்தை சென்றதைப் பேசினார்.

## மூன்றாம் பாசுரம்

திருப்பீதாம்பரத்தின் அழகு, திருநாபீ கமலத்திலே வீசினபடியைப் பேசினார் இப்பாசுரத்தில்.

## நான்காம் பாசுரம்

திருநாபீ கமலத்தோடு சேர்ந்த திருஉதரபந்தத்தை அநுபவித்தார்.

## ஐந்தாம் பாசுரம்

எனக்குத் தஞ்சமான பெரிய பிராட்டியார் இருக்கும் திருமார்பன்றோ என்னை ஸ்வரூபானுரூபமான கைங்கர்யம் கொண்டது என்றார்.

## ஆறாம் பாசுரம்

எல்லா உலகையும் அமுத செய்தருளின கண்டத்தின் அழகு என்னை உண்டாக்கிற்று என்பதன் மூலம் திருமார்பின் அழகு திருக்கழுத்திலே ஏற்றினபடியைப் பேசினார்.

## ஏழாம் பாசுரம்

தெப்பக்கட்டையைப் பற்றிக்கொண்டு நீந்தப் புக்கவன் தெப்பத்தை இழந்தேன் என்பது போலே, சிந்தையைப் கொண்டு ஒவ்வொரு அவயமாக அநுபவித்து வந்தவர், வாயின் அழகைக் கண்டவுடன் சிந்தையிழந்தேன் என்கிறார்.

## எட்டாம் பாசுரம்

திருக்கண்கள் என் அறிவையும் அழித்துவிட்டன என்கிறார் இப்பாசுரத்தில்.

## ஒன்பதாம் பாசுரம்

திருமேனி தன்னிடம் உள்ளதையெல்லாம் காட்டி என்னிடம் உள்ளைதையெல்லாம் கொண்டு சென்றது என்றார்.

இவ்வொன்பது பாசுரங்களும் ஆழ்வார் கர்ப்பக் க்ருஹத்தில் புகுவதற்கு முன்பு பெரிய பெருமாளுடைய வடிவழகை அவர் ஞான ஸாசஷாத்காரமாகக் காட்டியருள நெஞ்சென்னும் உட்கண்ணால் கண்டு பாடியவை.

## பத்தாம் பாசுரம்

லோகஸாரங்க மஹாமுனிகளின் தோளில் எழுந்தருளியிருப்பவராய் கர்ப்பக் க்ருஹத்தில் புகுந்து பெரியபெருமாளைக் கட்கண்ணாலே கண்டு **பெரியபெருமாளின் அழகைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணா** என்று பெரியபொருமாளோடு அந்தர்பவித்தபடியைப் பேசினர் இந்தப் பாசுரத்தில்.

இந்த பத்து பாசுரங்களிலும் ரஹஸ்ய த்ரயத்தின் அர்த்தமும் அர்த்த பஞ்சகங்களும் நிறைந்திருக்கின்றன. ப்ரமாண ஸாரமான ப்ரணவத்தில் அடங்கியுள்ள **அகார உகார மகாரங்களிலே** முதல் மூன்று பாசுரங்களைத் தொடங்குவதன் மூலம் இப்பரபந்தம் **ப்ரணவ ஸாரமாயிருப்பது** என்று ஆழ்வாரே உணர்த்தினார்.

ப்ரமேயஸாரம் எம்பெருமானுடைய திருக்கமலபாதப் பாதுகையே என்பதை 5, 6, 7 நடுப் பாரங்களில் முதல் எழுத்துக்களாலே உணர்த்தினார். இவ்வண்ணமாக எல்லாப் பொருள்களையும் தன்னுட் கொண்டிருப்பது இந்த திவ்யப்ரபந்தம். இதன் அரும் பொருள்கள் பெரியவாச்சான்பிள்ளை, அழகிய மாணவாளப்பெருமாள் நாயனார், ஸ்ரீவேதாந்தாசார்யர் என்னும் முன்று மஹாசார்யர்கள் அருளிய வியாக்யானங்களிலே காணத்தக்கவை.

**(மேலே குறிப்பிட்ட விஷயங்கள் புத்தூர் ஸ்வாமி வெளியுட்டுள்ள நாலாயிர திவ்ய ப்ரபந்த நூலில் இருந்து எடுக்கப்பட்டது)**

## இவரை போற்றி உரைக்கும் பாசுரம் - இராமானுசநூற்றந்தாதி - 11 பாசுரம்

சீரிய நான்மறைச் செம்பொருள் செந்தமிழாலளித்த
பாரியலும் **புகழ்ப்பாண்பெருமாள்** - சரணாம் பதுமத்
தாரியல் சென்னியிராமானுசன் தன்னைச் சார்ந்தவர்தம்
காரிய வண்மை என்னால் சொல்லா ணா திக்கடலிடத்தே.

## இந்த பாசுரத்தின் பொருள்

எம்பெருமானுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளை எல்லாம் விசதமாகப் பேசுகையாலே சிறந்தவையான நால்வேதங்களில் பொதிந்து கிடக்கும் நற் பொருள்களை அமலனாதிபிரான் என்னும் திவ்ய பிரபந்ததத்தில் சுருக்கி அருளிச் செய்தவரும் நாடெங்கும் பரவின புகழை உடையவரான திருப்பாணழ்வாருடைய சரணாரவிந்தங்களாலே அலங்கரிக்கப்பட்ட திருமுடியை, எம்பெருமானாரை அடிபணிந்தவருடைய ஆசார வைலசஷண்யமானது என் வாய்கொண்டு வருணிக்க முடியாதபடி மிகவும் சிறந்தது என்றாராயிற்று.

## திருப்பாணாழ்வார் அவதார மகிமை

திருப்பாணாழ்வாருக்கு முநிவாஹனரென்னும் திருநாமம் ப்ரஸித்தம். இவருடைய திவ்யப் பிரபந்தத்திற்கு ஒரு காரண விசேஷத்தினால் வியாக்கனம் இட்டருளின நிகமாந்தகுருவரர் அவ்வுரைநூலுக்கு முநிவாஹநபோகம் என்றே திருநாமம் சாற்றினார். லோகஸாரங்க மஹாமுனிகள் இவ்வாழ்வாரிடத்தில் மிகக்கொடிய அபசாரம் புரிய அது பொறாத அரங்கநாதன் அவரைத் தோளிலே தூக்கி இங்குக் கொண்டுவாரும் என்று அம்முனிவர்க்குக் கட்டளையிட, அவர் வந்து அக்கட்டளையை விண்ணப்பம் செய்து என் தோளிலே ஏறியருளீர் என்றார். பாணர் இவ்வுத்தமாச்ரமயின் மிக்க பெருமையையும் தம்முடைய மிக்க தாழ்வையும் நன் கறிந்தவராகையாலே இக்கொடிய அபசாரத்தை நான் நெஞ்சாலும் நினைக்க வில்லையே என்று சொல்லி மறுக்க வேண்டியிருக்க, அது செய்யாதே உடன்பட்டு அம்முனிவரின் தோளிலே ஏறி வீற்றிருந்தார். இது ஸம்பாவிதமான கதை என்று உலகங் கொள்ளாது. ஆனாலும் இக்கதையை உலகம் நம்புமாறு ஆழ்வார் தாமே செய்திட்டார். எங்ஙனே என்னில் முனிவர் தோளிலே ஏறினவுடனே அமலனாதிபிரான் அடியார்க் கென்னை ஆட்படுத்த விமலன் என்றன்றோ அநுஸந்தித்தார். சேஷத்வத்தைக்காட்டிலும் சீரியதான பாரதந்திரயத்தைப் பரிபாலிக்க வேண்டி முனிவர் கட்டளைக்கு இசைந்தேன் என்பது இங்கு உட்கருத்து. திருத்துழாயானது திருவடியில் கிடப்பதோடு திருமுடியில் கிடப்பதோடு வாசியற இரண்டையும் உகந்திருப்பது பாரதந்திரியத்தினாலன்றோ. முமுக்ஷுப்படியிலே அசித்தைப்போலே தனக்கேயாக எனைக்கொள்ளவேணு மென்கிறது நமஸ்ஸால் என்றருளிச் செய்த சாஸ்த்ரார்த்தம், திருப்பாணாழ்வார் பக்கலிலேயாயிற்று அனுஷ்டான சேஷமாகக் கண்டது.

(மேலே குறிப்பிட்ட விஷயங்கள் காஞ்சீ ஸ்வாமி அருயுள்ள திருவத்யயனோத்ஸவ வைபவ தீபிகையிலிருந்து எடுக்கப்பட்டது)

## தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணழ்வார், திருமங்கையாழ்வார்

திருமங்கையாழ்வார் தொண்டரடிப்பொடியாழ்வாரின் நந்தவனமிருக்குமிடத்தை ஒதுக்கித் திருமதில் கட்டினார் என்றும், தொண்டரடிப்பொடியாழ்வார் தம்முடைய பூக்கொய்யும் ஆயுதத்திற்கு அருள்மாரி என்னும் திருநாமத்தை இட்டார் என்றும் ஐதிஹங்கள் வழங்குகையாலே இவ்விருவரும் ஸமகலத்தவர்கள் என்றும், அன்பர்தாள்தூளி நற்பாணன் நன்கலியன் என்று உபதேச ரத்தினமாலையில் மாமுனிகள் இவர்கள் தோற்றத்தின் அடைவை அருளிச்செய்ததால் இம்மூவரும் ஒரே காலத்திலே வாழ்ந்திருக்கக்கூடும் என்று விளங்குகிறது.

## திருப்பாணாழ்வார் அவதாரஸ்தலத்தை குறிக்கும் உபதேசரத்தினமாலை 30ஆம் பாசுரம்

எண்ணருஞ்சீர்ப் பொய்கைமுன்னோ ரிவ்வுலகில் தோன்றியவூர்
வண்மைமி குகச்சி மல்லைமாமயிலை – மண்ணியில் நீர்
தேங்கும் குறையலூர் சீர்க்கலியன் தோன்றியவூர்
ஓங்குமுறையூர் பாணனூர்.

## திருப்பாணாழ்வார் திருவாக்கில் சிறியதோர் அநுபவம்

திருப்பாணாழ்வார் அருளிய அமலனாதிபிரானில் 4வது பாசுரத்தின் 3வது அடியில் மதுரமா வண்டு பாட மாமயிலாடரங்கத்தம்மான் என்பது. இங்குக் கூறிய வண்டும் மயிலும் ஸ்ரீரங்கநாதனே என்று பட்டர் திருவுள்ளம் பற்றுகிறார்.

பட்டர் அருளிச்செய்த ஸ்ரீரங்கராஜ ஸ்தவத்தில் (ஸ்லோகம் 10)

லக்ஷ்மி கல்பலதோத்துங்க ஸ்தந ஸ்தபக சஞ்சல்
ஸ்ரீரங்கராஜ ப்ருங்கோமே ரமதாம் மாநஸாம்புஜே

என்கிற ஸ்லோகத்தில் ஸ்ரீரங்கநாதனை வண்டாகவும்

மேலே உத்திர ஸ்தவத்தில் (44ஆம் ஸ்லோகம்)

ப்ரலயஸமயஸுப்தம் ஸ்வம் ஸரீரைகதேஸம்
வாத! சிதசிதாக்யம் ஸ்வேச்சயா விஸ்த்ருணாந:
கசிதமிவ கலாபம் சித்ரமாதத்ய தூந்வந்
அநுசிகிநி சிகீவ க்ரீடஸி ஸ்ரீஸமக்ஷம்

என்ற ஸ்லோகத்தில் எம்பெருமானை மயிலாகவும் கூறப்பட்டிருப்பது காண்க.

மேலே சொன்ன விஷங்கள் காஞ்சீ ஸ்ரீ உ.வே **PBA** ஸ்வாமியின் சிறு குறிப்பில் இருந்து ஏடுக்கப்பட்டது. இக்குறிப்பு ஸ்ரீசைலேசதயாபாத்ரம் 2010 வருடம் கார்த்திகை மாத இதழில் இடம் பெற்றுள்ளது.

திருப்பாணாழ்வார் திருவடிகளே சரணம்

வாசிக தோஷ: சஷந்தவ்ய:

ஸ்ரீ :
ஸ்ரீமதே ராமானுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:
ஸ்ரீமத் வரத குரவே நம:

ஸ்ரீபத்தங்கி பரவஸ்து பட்டர்பிரான் ஜீயர் - வருஷதிருநட்சத்திரம் - கார்த்திகை - புனர்புசம்




ஸ்ரீமணவாளமாமுனிகள் ஈடு காலக்சேஷப கோஷ்டி - இதில் ஸ்ரீ பத்தங்கி பரவஸ்து பட்டர்பிரான் ஜீயர் ஸ்வாமி எழுந்தருளியுள்ளார்

இவர் திருநாமம் - கோவிந்த தாஸரப்பன், கோவிந்தர், பட்டநாதர் (பூர்வாஸ்ரமத்தில்)
ஜீயர் ஆனா பின்பு - பட்டர்பிரான் ஜீயர், பட்டநாதமுனி

இவர் செய்தருளின க்ரந்தம் - அந்திமோபாய நிஷ்டை, சதுர் மறையினுபநிடத என்று தொடங்கும் வாழித்திருநாமம்; வம்சம் - அரணபுரத்தாழ்வான், ஸாமசாகை கோத்ரம் - பாரத்வாஜகோத்ரம், குலம் - பத்தங்கி பரவஸ்து, அவதாரஸ்தலம்-காஞ்சீ ஆசார்யர் - பெரிய ஜீயர், திருத்தகப்பனார் - மதுரகவியய்யர்

சிஷ்யர்கள் - கோயிலப்பன் (திருக்குமாரர் -பூர்வாஸ்ரமத்தில்), பரவஸ்து அண்ணன், பரவஸ்து அழகிய மணவாள ஜீயர், அண்ணராய சக்ரவர்த்தி, மேல்நாட்டுத் தோழப்பர் நாயனார், பரவஸ்து (ஆசூரி) வேங்கடச்சாரியர்.

இவர் மணவாள மாமுனிகள் ஏற்படுத்திய அஷ்டதிக் கஜங்களில் ஒருவராவார்.

தனியன்

ய: புநர்வஸுநசஷத்ரே வ்ருஸ்சிகஸ்தே ரவாவுதைத் /
சந்தோகவம்ஸே கோந்தபட்டநாதம் தமாஸ்ரயே //

வ்ருஸ்சிகேSதிதிபேஜாதம் பரவஸ்த்வம்ஸபூஷணம் /
வரயோகி பதாதாரம் பட்டநாமுனிம் பஜே //

வரயோகி பதாதாரம் பரவஸ்த்வம்ஸ பூஷணம் /
பட்டநாத முனிம் வந்தே தீபக்த்யாதி குணார்ணவம் //

ரம்யாஜாமாத்ரு யோகீந்த்ர பாதஸேவைக தாரகம் /
பட்டதாத முனிம் வந்தே வாத்ஸல்யாதி குணார்ணவம் //

வ்ருஸ்சிகே திதிபேஜதம் வரயோகி பதாச்ரிதம் /
கார்க்ய வம்ஸ ஸமுத்பூதம் பட்டநாதமுநிம் பஜே //

வாழித்திருநாமம்

இன்னுலகில் கச்சிதனில் வந்துதித்தோன் வாழியே
எழில் கார்த்திப் புநர்பூசத்திங்குற்றான் வாழியே
மன்னுமறைத் தண்டமிழை மகிந்துரைத்தான் வாழியே
மணவாள யோகி மலர்த்தாள் பணிவோன் வாழியே
பன்னு சிச்சன் அனுட்டானம் அறிவித்தான் வாழியே
பாரில் அட்டதிக்கயத்தில் பேர் பெற்றான் வாழியே
சொன்னநெறி மதுரகவி போலுமவன் வாழியே
தூய்மைமிகு பட்டர்பிரான் துணையடிகள் வாழியே

இவர் மதுரகவியாழ்வாரைப்போலே மாமுனியையே தெய்வமாக கொண்டாடி அவரிடம் 30 ஆண்டுகள் விடாமல் தொண்டு செய்தார். இவருக்கு மாமுநிகள் `அழகிய மணவாளனை' திருவாரதனப் பெருமாளாகக் கொடுத்தார்.

இவர் ஒரு திருவாடிப்பூரத்திலே `சூடிக்கொடுத்த நாச்சியார்` ப்ரஸாதங்களை ஆதாரத்துடன் கொண்டு வந்து மாமுனியிடம் கொடுத்தார். அதனால் மாமுனிகள் இவருக்கு `பரவஸ்துபட்டர் பிரான் தாஸர்' என்று திருநாமிட்டார்.

இவர் ஸந்யாஸ ஆஸ்ரம ஸ்வீகாரம் பெற்றபின் `பரவஸ்து பட்டர் பிரான் ஜீயர்` என்று திருநாமம் இடப்பட்டார்.

## பத்தங்கி பரவஸ்து பட்டர்பிரான் ஜீயர் ஸ்வாமியின் வம்சத்தாரைப் பற்றிய விவரம்

பெருமாள்கோவில் யதீந்தர ப்ரவணப்ரபாவம் பிள்ளை லோகாசார்ய ஸ்வாமி திருமாளிகை வைபவமும், ஸமாச்ரயணத் தனியன்களும் என்ற நூல் பிள்ளைலோகம் ஜீயர் வம்சத்தவரான ஸ்ரீ உ.வே. ஸ்தலசயனத் துறைவார் ஸ்வாமியால் 2010ஆம் ஆண்டு மறுபதிப்பு செய்யப்பட்ட நூலில் இருந்து எடுக்கப்பட்ட குறிப்புகள்.

நடுவிலாழ்வான்
|
ஆழ்வான்
|
வைத்தமாநிதி
|
அழகியமணவாளன்
|
வரதாசார்யர்
|
வேங்கடாசார்யர்
|
சடகோபாசார்யர்
|
போரகத்தி நாயனார்
|
கோவிந்தசார்யர்
|
கிருஷ்ணமாசாரியர்
|
ராமானுஜாசார்யர்
|
பத்தங்கி பரவஸ்து பட்டர்பிரான் ஜீயர் (கோவிந்த தாஸரப்பர்)
|
அண்ணன், பரவஸ்து அழகிய மணவாளர்
|
பரவஸ்து நாயனார்
|
சடகோபாசார்யர்
|
வரதாசார்யர் (பிள்ளைலோகம் ஜீயர்)

திருவல்லிக்கேணியில் எழுந்தருளியிருந்த ஸ்ரீஉ.வே பிள்ளைலோகம் ஸ்தல ஸயனத்துறைவார் ஸ்வாமி இந்த வம்ஸத்தில் அவதரித்தவர். இவருடைய வம்ஸத்தார்களுக்கு திருகடல்மல்லை ஸன்னிதியில் (மஹாபலிபுரத்தில்) விசேஷ மரியாதைகள் உண்டு.

## இவர் மாமுனிகளை ஆச்ரயித்தல்

கோவிந்த தாஸரப்பர் தண்டமிழோர் மன்னுபுகழ் தொண்டை மண்டலத்தில் வந்துதித்து, தன்னுடைய வாசாரம் தப்பாமல் இந்நிலத்தில் ஆச்ரயத்துக் காட்டி, அரங்கத்தே சென்று புகுந்து, எம்பெருமான் வாசமலர்த்தாள் பரவும் மணவாளயோகி மலர்த்தாள்கள் இறைஞ்சி, ஆச்ரயித்து, எம்பாரைப்போலே இவரும் அவருக்கு நிழலும் அடிதாறும் போல அரை க்ஷணகாலமும் பிரியாமல் வாழ்ந்து கொண்டிருந்தார்.

## மாமுனிகள் இவருக்கு ஸ்ரீரங்கராஜரை திருவாராதனப்பெருமாளக் கொடுத்தல்

திருவாய்மொழியினுடைய ஈடு முதலான வ்யாக்யானங்களையும், மற்று முண்டான ஆழ்வார்கள் அருளிச் செய்த வ்யாக்யானங்களையும் வ்யக்தமாக ப்ரஸாதித்திக் கொண்டும், ஸ்ரீவசணநபூஷணாதிகளின் அர்த்த விசேஷயங்களையும் ஆர்சிப்பித்துக்கொண்டும், திருமலையாழ்வாருடைய அடிநிழலிலே தேசந்திகழ எழுந்தருளியிருக்கிற காலத்திலே, பெரியபெருமாளுடைய நியமனத்தாலே, மாமுனிகள் தமது திருவாராதன எம்பெருமானான ஸ்ரீரங்கராஜரை எழுந்தருளப் பண்ணிவைத்துப் பிள்ளைலோகாசாரியருடைய திருநக்ஷத்ரமான ஐப்பசி மாஸம் திருவோணத் திருநன்னாளிலே திருப்ரதிஷ்டையும் கொண்டருளப்பண்ண, தமது திருக்கைகளாலே ஆராதநமும் செய்து, நீ பிறந்த திருவோணம் என்று சொல்லுகிற படியே மற்றுமுள்ள ஆசாரியர்கள் திருநக்ஷத்ரங்களையும் நெஞ்சில் நினைத்துக்கொண்டு, செந்நெலரிசி சிறுபருப்புச் செய்த அக்காரம் நறு நெய்பாலால் பன்னிரண்டு திருவோணமட்டேன் (பெரியாழ்வார் திருமொழி 2-9-7) என்கிறபடியே அக்காரவடிசிலாலே அமுது செய்தருளப் பண்ணிப்பரிபாலித்துக்கொண்டும், ஸ்ரீரங்கஸ்ரீக்கு மங்களதீபம் போலே எழுந்தருளி இருந்தார்.

(மேலே குறிப்பிட்ட விஷயங்கள் ஸ்ரீபிள்ளைலோகம் ஜீயர் அருளியுள்ள யதீந்த்ரப்ரவண ப்ரபாவாம் என்கிற நூலில் இருந்து சில பகுதிகள் எடுக்கப்பட்டது)

## கோவிந்த தாஸரப்பாவின் மதுரகவி நிஷ்டை

எம்பெருமானார் திருவடிகளுக்கு வடுகநம்பியைப்போலே இவரும் பெரிய ஜீயர் திருவடிகளைப்பற்றி விடாது ஆசார்ய அபிமானமே உத்தாரகம் என்பதற்கு விளக்கமாகத் திகழ்ந்தார்.

இவரை கௌரவப் படுத்தும் வகையில், ஒரு நாள் பெரியஜீயர் பெரிய திருவோலக்கமாக எழுந்தருளி கூடியிருந்த ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியில், **தேவு மற்றறியேன்** என்ற நிஷ்டை நம் கோவிந்த தாஸரப்பாவுக்கே உள்ளது என்று விசேஷமாக பாராட்டினார். மாமுனிகளும் தாம் பகவத் அவதாரம் என்று தோன்றும் படியாக **இதுக்கு முன்பு பரவஸ்துவான இவர் இப்போது நம்முடைய வஸ்துவானார். நமக்கு ஈடு இவர்** என்று அருளிச்செய்து தம் அழகிய மணவாளப்பெருமாளாயும் இவருக்கு திருவாரதனப்பெருமாளாகப் ப்ரசாதித்து பிராப்ய நிஷ்டையில் ஊன்றச் செய்தார்.

## மோர் முன்னர் ஐயன் என்ற திருநாமம் ஏற்படுதல்

பல வருடகாலம் கோவிந்த தாஸரப்பாவும் மோர் முன்னமாக தளிகை ப்ரஸாதம் ஸ்வீகரிக்கப்பெற்று மாமுனிகளைப் பிரியாமல் ஆட்செய்தார். அதாவது ஆசாரியன் அமுது செய்த இலையில் அவர் கடைசியாக அமுது செய்த மோர் பிரசாதத்தின் ருசிமாறாமல் அதையே முதலில் உண்டு, பிறகு மற்ற அமுதுகளை அதே இலையில் உண்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார். அதனால் இவரை **மோர் முன்னர் ஐயன்** என்று பெயரிட்டு அழைத்தனர். (இவர் க்ருஹஸ்தராக கோவிலில் வாழ்ந்த போதே இவ்வாறு சேவை புரிந்தார்)

## இவருக்கு பட்டர்பிரான் தாஸர் மற்றும் பட்டர்பிரான் ஜீயர் என்னும் திருநாமங்கள் ஏற்படக்காரணம்

ஒருமுறை கோவிந்த தாஸரப்பர் ஸ்ரீவில்லிபுத்தூருக்கு சென்று திருவாடிபூரத்தில் சூடிக்கொடுத்த நாச்சியார் தீர்த்த பிரசாதங்களை மிகவும் ஆதரித்துக் கொண்டு வந்து மாமுனிகளிடம் சமர்பித்தார். பெரிய ஜீயரும் மிகவும் அங்கீகரித்து கோவிந்த தாஸரப்பாரை **பட்டர்பிரான் தாஸர்** என்று திருநாமம் சூட்டினார். சில காலத்திற்கு பிறகு இவர் மஹாவிரக்தராய் ஸந்யாச ஆஸ்ரமம் மேற்கொண்டார். அப்போது இவருக்கு **பட்டர்பிரான் ஜீயர்** என்ற திருநாமம் ஏற்பட்டது.

**(மேலே சொன்ன விஷயங்கள் மதுரை பேராசிரியர் முனைவர் ஸ்ரீ.உ.வே இரா.அரங்கராஜன் ஸ்வாமி அருளியுள்ள மன்னுபுகழ் மணவாளமாமுனிவன் என்கிற நூலில் இருந்து எடுக்கப்பட்டது.)**

## மேல் நாட்டுத் தோழப்பர், அழகிய மணவாளப்பெருமாள் நாயனார், திருமலை நல்லான் அண்ணராக சக்ரவர்த்தி ஆகியோர் பட்டர்பிரான் ஜீயரை புருஷகாரமாக்கொண்டு பெரிய ஜீயரை ஆச்ரயித்தல்

பட்டர்பிரான் ஜீயர் செய்த சில பெரிய உபகாரங்களை கீழே அனுபவிக்கலாம்.

பெரியஜீயர் நோவுசாற்றியிருக்கும் சமையத்தில் மேல் நாட்டுத் தோழப்பர் அவர் திருத்தமயனார் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் உடன் நம்பெருமாளை சேவிப்பதற்காக கோயிலுக்கு எழுந்தருள அவர்களை பட்டர்பிரான் ஜீயர் தென்மாடவீதியில் கண்டருளி நீங்கள் எங்கு போகப் போகிறீர்கள் என்று கேட்க அவர்கள் உகப்புடன் பெரியபெருமாளை சேவிக்க வந்த விருத்தாந்தத்தை விண்ணப்பம் செய்தனர். இப்படி ஜ்ஞான பக்தியாய் இருக்கிற நீங்கள் எம்பெருமானார் புனர் அவதாரமான நம் பெரிய ஜீயரை சேவிக்க வேண்டாவோ? என்று அருளிச்செய்தார். அவர்கள் அதற்கு இசைந்து இவருடன் மடத்திற்கு எழுந்தருளினார்கள். அங்கே இருவரும் பட்டர்பிரான் ஜீயரை புருஷகாரமாக்கொண்டு மணவாளமாமுனியின் திருவடிகளை சேவித்துநிற்க அவரும் இவர்களை பரிபூர்ணகடாக்ஷம் செய்தருளினார்.

முன்பொருகால் எம்பெருமானாரால் காளமேகம் என்று போற்றப் பெற்ற திருமலை நல்லான் சக்ரவர்த்தி வம்சத்தில் அவதரித்த புறச் சமயவாதிகளை வென்ற அண்ணராய சக்கரவர்த்தி தம் குடும்பத்துடன் பெரியபொருமாளை சேவிப்பதாற்காக ஸ்ரீரங்கத்திற்கு வந்தார். அப்போது அவருடைய திருத்தாயார் ஆச்சி என்பவர் பெரிய ஜீயரின் சரம தசையில் தேசாந்தரங்களிலிருந்து வந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் மடத்துக்குச்சென்று பெரிய ஜீயரைக் குழாம் குழாமாகச் சென்று சேவித்துத் திரும்பு வருவதைக் கண்டாள். அதைக் கண்டதும் ஆச்சி அண்ணராய சக்கரவர்த்தியுடன் விரைந்து சென்று பெரிய ஜீயர் திருவடிகளில் பட்டாபிரான் துனைகொண்டு தண்டனிட்டனர்.

ஜீயர் நெடுநாளக அங்கீகரிப்பதற்கு விஷயம் காணாததால் முடங்கிக் கிடந்த தம் திருவடிகளை நிமிர்த்தி அவர் திருமுடியில் சேர்த்தி அருள் செய்தார்.

அண்ணராய சக்கரவர்த்திக்கு மாமுனிகள் இட்ட ஆனையாவது. எம்பெருமானார் ஜீயரை திருவேங்கடத்து துரோஹிகள் துன்பம் செய்யாதபடி ரசஷித்து நம் தரிசன விஷயமாக அநேக கார்யங்களைச் செய்து வந்தது போலே இனியும் செய்து வாரீர் என்றார். உடனேயிருந்த பட்டர்பிரான் ஜீயரை அழைத்து வாரீர் கோவிந்தப்ப தாஸரே! நீர் நமக்கு ஒரு கரமல்லவோ! நாம் செய்வதாகவே நினைத்து இவர்களுக்கு பஞ்ச ஸம்ஸ்காரங்களையும் செய்வீர் என்று அருளிச் செய்து அண்ணராய சக்ரவர்த்தியையும், தோழப்பரையும், நாயனாரையும் அவரிடம் ஒப்படைத்தார். பின்னர் அண்ணராய சக்ரவர்த்தி பட்டர் பிரான் ஜீயரிடம் பஞ்ச ஸம்ஸகாரங்களை பெற்றுக் கொண்டு தம் குடும்பத்துடன் மாமுனிகளின் ஆனையை நிறைவேற்ற திருமலைக்குச் சென்றார்.

பெரிய ஜீயர் திருநாட்டுக்கு எழுந்தருளின பிறகு பட்டர் பிரான் ஜீயர் திருப்பதிக்கு எழுந்தருளினார். அங்கு கோவிந்தராஜனை சேவித்து மங்களாசாசநம் பண்ணி திருமலையில் திருவேங்கடமுடையானை சேவித்து மங்களாசாசநம் செய்து திருப்பதியே பதியாகக் கொண்டு அண்ணராயசக்ரவர்த்தி, நாயனார், தோழப்பர் முதலான சிஷ்யர்களை தர்ஸநப்ரவர்த்தகராம்படி திருத்தினார்.

மேலே சொன்ன விசஷயங்கள் பரவஸ்து அழகிய மணவாள ஜீயர் அருளிச்செய்த ஸ்ரீபட்டநாத ப்ரபாவம் என்ற கட்டுரையில் இருந்து எடுக்கப்பட்டது.

இவர் ஸந்யாஸ ஆஸ்ரம ஸ்வீகாரம் பெற்றுக்கொண்ட பிறகு சிஷ்யர் ஆனியூரண்ணன் இவரை புகழ்ந்து அருளிச் செய்துள்ள தனியன்:

வாத்ஸல்யதீபக்தி விரக்திபூர்த்திதயாதி கல்யாணகுணைகராஸிம்
ஸ்ரீஸௌம்யஜாமாத்ருமுநீந்த்ரபாஹுமூர்த்திம் பஜேபட்டவரம் முநீந்த்ரம்.

ஸ்ரீபத்தங்கி பரவஸ்து பட்டர்பிரான் ஜீயர் திருவடிகளே சரணம்

வாசிக தோஷ: சஷந்தவ்ய: